Registered No. M. 3536.

தனிப்பிரதி விலை { உள்நாடு அணா 1; சிலோன் ,, 1½; மலேயா, பர்மா ,, 2

# நவசக்தி

"NAVASAKTI"

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

சந்தா விவரம்

| | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 4 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 2 | 4 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

விளம்பர விகிதம்.
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூ. 6 0
சில்லறை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

சிலம்பு கசு ஈசுவர௵ ஆனிமீ ருஉ (18—6—1937) வெள்ளிக்கிழமை பரல் ச

# திருமால் அருள் வேட்டல்

## 3. திருமலை

(தொடர்ச்சி)

மரத்தடியில் வீற்றிருந்தாய் மதிலெடுத்துச் சில்லோர்
மாளிகைகள் கோபுரங்கள் மடங்கள்பல வகுத்தார்
சிர[illegible]டன் அன்பர்குழு சேர்ந்தஇட மெல்லாம்
சி[illegible]மைமுறை ஆயினவே செயற்கைவெம்மை என்னே
வா[illegible]ளைதயருள் இயற்கைநெறி வளர்வதெங்ஙன் ஐயா
மந்திவிளை யாடிமகிழ் மரஞ்செறிந்த மலையில்
கரத்தினிலே ஆழிகொண்டு காக்கின்ற அரசே
காசினியோர் உய்யும்வழி கருணைபுரி யாயே. (6)

சாதியிலாச் சந்நிதியில் சாதிநுழை வாச்சே
சட்டமிலா முன்னிலையில் சட்டம்புக லாச்சே
நீதிநிலை திருமுன்னே நீதிவிழ லாச்சே
நிறைசிறந்த இடமெல்லாம் நிறைசிதைய லாச்சே
ஆதிநெறி மீண்டுமிங்கே ஆக்கம்பெற லுண்டோ
ஆழ்வார்தம் தமிழ்மறையை ஆலயமாக் கொண்ட
சோதிமலை முடியரசே சுதந்திரமே நிலவும்
தூயவெளி ஒளியினிலே சூழஅருள் செய்யே. (7)

இயற்கையிறை நீயென்னும் எண்ணமிலார் சூழ்ந்தே
எத்தனையோ செயற்கைவினை இயற்றுகிறு ரந்தோ
பயி[illegible]சிலர் புன்பொருளைப் பரப்புகின்றூர் முன்னே
பாராதி அண்டமெலாம் பரமநின தலவோ
முயற்சியுள முனிவர்வழி முன்னுளில் வளர்ந்த
முத்திநெறி வளம்பெறவே முதற்பொருளே அருளாய்
குயிற்றூலும் மயில்நடமும் குரங்குவிளை யாட்டும்
கோபாலா எனுமுழக்குங் குலவுமலைக் கொழுந்தே. (8)

ஏழுமலை மீதிருக்கும் ஏழிசையின் பயனே
ஏழைமுகம் பாராயோ எத்தனைநாட் செல்லும்
வாழுமலை என்றுவந்தேன் வாழ்வுபெற வேண்டி [யேன்
வழியறியேன் துறையறியேன் வாழ்த்தும்வகை யறி
ஆழநினைந் தழவறியேன் அவனியிலேன் பிறந்தேன்
ஆண்டகையே என்னசெய்வேன் ஆதரிப்பா ரிலையே
வேழவினைக் களிகண்டு வெருவுகின்றேன் ஐயா
விசயனுக்குக் கீதைசொன்ன வேதாந்தப் பொருளே.

நற்பிறவி எனக்களித்தாய் நல்லுடலுந் தந்தாய்
நானிலத்தில் வாழ்ந்துனது நளினமலர் மேவச்
சிற்பரம வீணுரையால் சிதைத்துவிட்டேன் உடலைச்
சீருடலை மீண்டும்பெறச் சித்தநெறி அறியேன்
எற்புருகத் தவங்கிடக்க என்னுடலந் தாங்கா
எங்குமுள இறையோனே என்றனிலை யுணர்வாய்
வெற்பினிலே மங்கைமகிழ் வேந்தனென வந்தேன்
வேதனைகள் தீர்ந்துய்ய வேங்கடவா அருளே. (10)

—திரு. வி. க.

# சாதிக்கட்டு
அல்லது
# காதலின் தோல்வி

(வேலன்)

மாலை மணி ஐந்து. கோடைக் காலம். அக்காலத்தில்தானே கடற்காற்றின் அருமை தெரியும்! கிஸன்சந்த் தலவாலா ஜில்லாவின் கலெக்டர்; இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். பரீட்சையில் தேறியவர். கடற்கரைச்சாலையின் ஓரத்தில் தமது காரை நிறுத்திவிட்டுச் சாலை ஓரத்தில் அமைக்கப்பட்டிருந்த ஒரு சிமிட்டி ஆசனத்தில் அமர்ந்திருந்தார்.

ராம்பிரசாத் ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயர்; மாதம் அறுபது ரூபாய் சம்பாதிக்கிறார். அவரும் கடற்காற்றின் சுகத்தை அநுபவித்தற் பொருட்டு சாலை ஓரமாகப் போய்க்கொண்டிருந்தார்.

கிஸன்சந்த் ராம்பிரசாத்தைப் பேர் சொல்லிக் கூப்பிட்டார். ராம்பிரசாத்துக்கு ஒன்றும் விளங்கவில்லை. தம்மைக் கூப்பிடுகிறவர் யார் என்று திரும்பிப் பார்த்தார்; பக்கத்தில் உட்கார்ந்திருக்கும் நண்பரைக்கண்டார். சிறிது நேரம் பார்த்தபிறகு தம்முடன் படித்த கிஸன்சந்த் என்பதை உணர்ந்தார்.

கிஸன்சந்த்:—ராமு! நீ என்னை மறந்துவிட்டாயா? நாம் இருவரும் கல்லூரியை விட்டுப் பிரிந்து இன்னும் ஐந்து வருஷங்கள்கூட கழியவில்லையே! இதற்குள் எவ்வாறு மறந்து விட்டாய். இவ்வளவுதான் நீ என்மீது கொண்டிருக்கிற அன்பு.

ராம்பிரசாத்:—மறதி மனிதனுக்கு இயற்கை தானே. நீ கல்லூரியில் இருந்தபோது அணிந்திருந்த உடை வேறு. இப்போதுள்ள உடை வேறு. இவ்வுடைமாற்றமும் என்னை மயக்கி விட்டது. நானோ! என்றும் ஒரே சிஞ்சீவி. சரி, நான் உன்னைக் கவனியாததற்கு மன்னிக்க வேண்டும். நீ இப்போது எங்கு இருக்கிறாய்? கல்லூரியை விட்டதும் இங்கிலாந்து சென்றதாகக் கேள்விப்பட்டேன். ஏதாவது பெரிய உத்தியோகத்தில் இருக்கிறாயா?

கிஸன்:—ராமு! நான் இங்கிலாந்து சென்று ஐ. ஸி. எஸ். பாஸ்செய்தேன். நான் தற்போது பக்கத்திலுள்ள தலிவாலா ஜில்லாவில் கலெக்டராக இருக்கிறேன். நீ என்ன செய்கிறாய்?

ராம்:—நான் ஒரு சாதாரண உபாத்தியாயராக இருக்கிறேன். என்னசெய்வது? இக்காலத்தில் உபாத்தியாயர் பிழைப்பெல்லாம் திண்டாட்டமாகத்தான் இருக்கிறது.

கிஸன்:—அஃது ஒரு புண்ணியமான தொழிலாயிற்றே. சரி; அதோ காரில் போகிறது யார் தெரியுமா?

ராம்:—தெரியும்! அவன்தான் நம்மோடு படித்த ராமசேஷு. அவன் எல்லாக் குட்டிக்கரணமும் போட்டு விட்டு இப்போது வக்கீல் வேலையில் இருக்கிறான். ஊரில் வக்கீல்களின் எண்ணிக்கையும் பெருத்து விட்டது. ஏதோ! ஒருகாரை வைத்துக்கொண்டு காலத்தைத் தள்ளிக் கொண்டு வருகிறான்.

கிஸன்:—சரி; அவனும் என்னோடு இங்கிலாந்துக்கு வந்தானே அது தெரியுமா?

ராம்:—எல்லாம் எனக்குத் தெரியும். அவனுடைய சரித்திரத்தைச் சொல்லப் போனால் காலதாமதமாகும் உனக்குப் பல வேலைகள் இருக்கலாம். அவைகளெல்லாம் கெட்டுவிடும்.

கிஸன்:—இப்போது அவசரம் ஒன்றும் அவ்வாறு முழுகிப்போய் விடவில்லை. நாம் இருவரும் சந்தித்து ஐந்தாறு வருஷங்களாயின. நீ ஏதாவது அவசரமாகப் போகவேண்டுமா?

ராம்:—இல்லை. அவன் இங்கிலாந்தில் எந்தப் பரீட்சைக்குப் படித்தான்?

கிஸன்:—அவன் முதலில் பாரிஸ்டர் பரீட்சையில் பாஸ்செய்து விட்டான்; பிறகு ஐ. ஸி. எஸ். படிக்க ஆரம்பித்தான். அவன் எங்களில் ஒருவரோடும் சேர்வதில்லை. எப்போதும் அவன் தனியாகவே யிருப்பான்; நன்றாகத் தான் படித்துக்கொண்டிருந்தான். என்னமோ? பரீட்சையில் பல்டி அடித்து விட்டான். பாரிஸ்டர் பட்டத்தோடு இங்குவந்து வக்கீல் தொழில் செய்கிறான்.

ராம்:—நீங்கள் இருவரும் இங்கிலாந்தில் இருந்தபோது இங்குச் சில விஷயங்கள் நடந்தன. அவற்றையே நான் அவனுடைய சரித்திரம் என்றேன்.

நம்மோடு கோபிசந்த் என்றொரு பையன் படித்துக் கொண்டிருந்தானே. அவன் தெரியுமா? அவனுக்கும் இந்த ராமசேஷுக்கும் நெருங்கிய சிநேகம். இவர்களுக்குள் வரும் சந்தேகங்களை ஒருவருக்கொருவர் தீர்த்துக்கொள்வது வழக்கம். சில சமயங்களில் இருவரும் சேர்ந்து படிப்பார்கள். அப்படிச்சேர்ந்து படிப்பதெல்லாம் கோபிசந்த் வீட்டில்தான்.

கோபிசந்துக்கு ஒரு சகோதரி இருந்தாள். அவள் எஸ் எஸ்.எல். ஸி. பாஸ் செய்துவிட்டு இண்டர்மீடியட் வகுப்பில் படித்துக்கொண்டிருந்தாள். அவள் பெயர் அகல்யாபாய். அவள் தனக்கு நேரும் சந்தேகங்களை ராமசேஷுவைக் கேட்டே தீர்த்துக்கொள்வாள். அது வேறு விதமாக முடிந்துவிட்டது.

கிஸன்:—அதுதான் நமது தேசத்திலிருக்கின்ற தப்பு. அப்படி இருந்தாலென்ன. ஒருவித தப்பெண்ணமுமில்லாது பேசிக்கொண்டிருந்தாலும் ஊரார் பலவாறு புறங்கூறுவார். என்ன செய்வது? அப்படிப்பட்ட நாட்டில் நாம் பிறந்து விட்டோம். மேலே என்ன நடந்தது?

ராம்:— இவர்கள் இருவருக்குள்ளும் காதல் எண்ணம் ஓங்கி வளர ஆரம்பித்தது. ராமசேஷுக்கும் அகல்யாவையே மணக்கவேண்டும் என்ற எண்ணம் உண்டாய்விட்டது. அப்பெண்ணும் அவனையே கணவனாகக் கொள்ள விரும்பினாள். ஆனால் தங்களுக்குள் இருந்த காதலை இருவரும் வெகு நாட்கள்வரையில் சொல்லிக் கொள்ளவில்லை. பிறகு எப்படியோ இருவருக்குள்ளும் கடிதப் போக்கு வரவு நேர ஆரம்பித்தது. அதை அகல்யாபாயின் தகப்பனார் அறிந்து கொண்டார்.

கிஸன்:—தகப்பனாரும் 'அப்டுடேட்' மனிதர் தானே. இருவரும் எச்சாதியராயினும் காதல் முற்றிய காலத்தில் ஒன்றுபட வேண்டியதேதல்லது. இதற்குத் தடையாக ஒருவரும் இருத்தல் ஆகாது.

ராம்:—அதுதான் நமது தேசத்தில் இல்லை. சாதிக்கட்டுக்கள் இருக்கிற வரையில் காதல் மணங்கள் எங்கிருந்து நிகழப் போகின்றன. ராமசேஷு இங்கிலாந்துக்குப் புறப்பட்டான். கப்பலேறும்போது வழிவிடவந்தவர் பலர். நானும் அப்போது போயிருந்தேன். அகல்யாபாயும் வந்திருந்தாள். அவள் முகத்தில் இருவிதக் குறிகள் காணப்பட்டன. ராமசேஷுவின் பிரிவை நினைக்கும்போது வாட்டக் குறியும், தன் காதலன் உயர் படிப்புக்காக இங்கிலாந்து செல்கிறான் என்று எண்ணும் போது முகமலர்ச்சியும் காணப்பட்டன. இவ்வாறு இருவித நிலையில் நின்று வாடும் அகல்யாபாய்க்கு வேண்டிய ஆறுதல்களைக் கூறிவிட்டு ராமசேஷு கப்பலேறிவிட்டான். கப்பலின் மேல்தட்டிலிருந்து தனது கைக்குட்டையால் அகல்யாபாயை போவென்று கூறியும் அவளுக்குப் பிரிய மனம் வரவில்லை. அக்கப்பல் கண்ணுக்குத் தெரியுமட்டும் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு வீடு வந்தாள்.

கிஸன்:—பிறகு என்ன நடந்தது? தகப்பனார் இம்மணத்தைத் தடுத்தாரா?

ராம்:—தகப்பனாருக்குச் சாதிப்பித்து அதிகம். அவர் உயர் சாதியராம். ராமசேஷு தாழ்ந்த சாதியாம். அதனால் அவனுக்குத் தம் பெண்ணைக் கொடுப்பதைவிட ஒரு கிணற்றில் பிடித்துத் தள்ளிவிடுவது உசிதமென்று அவர் நினைத்தார். இங்கிலாந்துக்குச் சென்றதும் ராமசேஷு அகல்யாபாய்க்குக் கடிதங்கள் எழுத ஆரம்பித்தான். இங்கிருந்தும் அவ்விடத்துக்குக் கடிதங்கள் பல சென்றன. இவ்வாறு இரண்டு வருஷம் நடந்தது. சில கடிதங்கள் தகப்பனார் வசம் கிடைத்தன. அவர் அவைகளை மறைத்துவிட்டார். இங்கிலாந்திலிருந்து வரும் கடிதங்களைத் தாம் வாங்கிக்கொள்வார். அகல்யாபாயையும் கடிதம் எழுதாமல் செய்துவிட்டார். இங்கிலாந்தில் இராமசேஷுவின் மனம் துடிக்க ஆரம்பித்தது.

கிஸன்:—இஃது இயற்கைதானே. தானாக வழிந்து ஓடும் காதல் வெள்ளத்தைச் சாதிக்கட்டு என்ற அணையால் தடுப்பது அழகா? காதல் மணமில்லாத இந்நாட்டில் இன்ப வாழ்வு எங்கிருந்து உண்டாகும்? தற்போது நடக்கும் கலியாணங்களெல்லாம் பொம்மைக் கலியாணங்களாகத்தானே யிருக்கின்றன. நமது சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் நாம் காதலோடு கூடிய இன்ப வாழ்விற்குரிய படிப்பைத் தருவது இல்லை. அதனால் அவர்கள் அடிமைப்பட்டுத் தமது பெற்றோர் விருப்பத்துக் கிணங்கிப் பொம்மைகளாகிறார். இம்முறை ஒழிந்தாலேயே நம் நாடு நற்கதி பெறும்.

ராம்:— அகல்யாபாய்க்கு வேறோரிடத்தில் மணம் பேசியாய்விட்டது. மணமகன் ஒரு காகித வியாபாரி. படிப்பில் வடிகட்டின முண்டம். பார்வையிலோ இதிகாசங்களில் கூறப்படும் அரக்கர்கள் தோற்றுவிடுவார்கள். பணத்திலோ குறைவில்லை. பணமிருந்தால் எல்லாம் இருப்பதாகப் பெற்றோர் எண்ணிவிடுகிறார். என் செய்வது? உலகம் பணத்தில் இருக்கிறது. பணத்தை முக்கியமாக எண்ணிக்கொண்டு அகல்யாபாயைக் காகித வியாபாரி தலையில் கட்டிவிட்டார்கள். அகல்யாபாய் மிகக்கஷ்டப்பட்டாள். கஷ்டப்பட்டும் என்னசெய்வது? பெற்றோருக்கு மிஞ்சி ஒன்றும் செய்யக்கூடவில்லை. காதலித்த ஒருவனும் இங்கு இல்லை. இறுதியாகத் தன் நிலைமையை விளக்கி ராமசேஷுக்கு ஒரு கடிதம் எழுதினாள். ராமசேஷு அக்கடிதத்தைப் பெற்றான். அக்கடிதப்படி திருமண நாளன்றுதான் அவனுக்கு ஐ. ஸி.எஸ். பரீட்சை ஆரம்பம். அவன் பரீட்சையில் பாஸ் செய்திருப்பானா? நீயே கூறு.

கிஸன்:—அவன் பாஸ் செய்யாத காரணத்தை இப்போதே நான் அறிந்தேன். பிறகு என்ன நடந்தது?

ராம்:—ராமசேஷு இங்கிலாந்திலிருந்து திரும்பினான். தன்னைவந்து பார்க்கும்படி அகல்யாபாய்க்குலெட்டர் எழுதினான். அந்த லெட்டரும் அவளுக்குக் கிடைத்தது. கிடைத்தும் இராமசேஷுவைப்பார்க்க அவள் மனம் ஒருப்படவில்லை. அதனால் அவள் இராமசேஷுவைச் சென்று பார்க்கவேயில்லை. இப்படி இரண்டொரு மாதங்கள் கழிந்தன. ஒருநாள் அகல்யாபாய் தன் தாய் வீட்டுக்கு வந்திருப்பதாக ராமசேஷு கேள்விப்பட்டான்; அவ்விடத்துக்கு ஓர் ஆளை அனுப்பித் தன்னை வந்து பார்க்கும்படி கூறினான். அகல்யாபாய் சற்று அச்சத்தோடேயே தனது இளைய சகோதரனோடு ராமசேஷு வீட்டுக்குச் சென்றாள். அங்குக் கீழ்க்கண்டவாறு சம்பாஷணை நடந்தது.

ராமசேஷு:—"அகல்யா! நாம் சந்தித்து வெகுநாட்கள் ஆய்விட்டன. இப்போது சௌக்கியம்தானா.

அகல்யாபாய்:— என்ன சௌக்கியம். ஆண்டவன் நமது எண்ணத்தைக் கண்கொண்டு பார்க்கவில்லை. நான் வேறொருவரை மணக்க நேர்ந்தது. அஃது என் தலை விதி."

என்று கூறி அழ ஆரம்பித்தாள். என்ன என்றாலும் பெண்ணின் மனம் இளகிய மனம்தானே. ராமசேஷு கீழ்க்கண்டவாறு கூறிக் கொண்டே அகல்யாபாயைத் தேற்றினான்.

"நீ அழாதே. அதனால் ஒன்றும் முழுகிப்போய் விடவில்லை. நாம் இருவரும் இனி காதல் முறையில் இல்லாவிட்டாலும் சிநேக முறையில் அடிக்கடி சந்திப்போம். நீ அழாதே."

தனது பெற்றோர்களை விட்டாயினும் ராமசேஷுவோடு தனித்து வாழவேண்டுமென்பது அகல்யாபாயின் எண்ணம். அவ்வெண்ணம் கைகூடாதென்பதை ராமசேஷுவின் பேச்சிலிருந்தே அவள் குறிப்பாகக் கண்டுகொண்டாள். ராமசேஷுவின் உறவையே அவள் எண்ணிக் கொண்டிருந்தாள். அது பாழ்பட்டது. ஒன்றும் கூறாமல் தம்பியோடு தாய் வீடு சேர்ந்தாள்.

மேற்குறித்த சம்பவம் நடந்த ஒரு வாரத்துக்குள் அகல்யாபாய் ஒரு கிணற்றில் வீழ்ந்து தனது உயிரை மாய்த்துக் கொண்டாள். அவளது மரணத்துக்குக் காரணன் ராமசேஷுவே. என் செய்வது? காரியம் மிஞ்சிவிட்டது. இதைக் கண்ட ராமசேஷுவும் விவாகம் செய்துகொள்வதில்லையென்று முடிவு செய்துகொண்டு இருக்கிறான்.

கிஸன்:—சரி சரித்திரம் முடிந்து விட்டது. போகலாமா? நான் எப்போது பீச்சுக்கு வந்தாலும் இவ்விடத்தில் தான் இருப்பேன். எப்போதாவது இப்பக்கம் வந்தால் வா.

ராம்:—வருகிறேன். எனக்கும் நேரமாய்விட்டது. போய் வருகிறேன். நமஸ்காரம்.

கிஸன்: நமஸ்காரம்.

இருவரும் போகிறார்.




வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கசு ஈசுவரஸு ஆனிமீ ருஉ (18—6—1937) வெள்ளிக்கிழமை பரல் ௪


VII

இங்கிலாந்தில் திருமதி ஸிம்ஸன் ஒரே இடத்தில் வாழ்ந்து வந்தாரில்லை. அவர் பல இடங்களில் வாழ்ந்துவந்தார். ஒரே இடம் அவருக்கு மகிழ்ச்சியூட்டுவதில்லை. அடிக்கடி இடமாற்றுவதால் அவருக்கு இன்பம் பெருகும்போலும்!

திருமதி ஸிம்ஸன் லண்டனிலும் ஓரிடத்தில் வதிந்து வந்தார். அம்மையார் யாண்டு வதியினும், ஆண்டுள்ளாருடன் உறவு கொள்வது அவர்தம் இயல்பு. இளம் பெண்-ஆண்களிடைக் காலங் கழிப்பதில் திருமதி ஸிம்ஸனுக்கு அதிக விருப்பம். இளஞ் சூழலிலுள்ள இன்பம் வேறெதிலுண்டு? அந்நுட்பம் திருமதி ஸிம்ஸன் வாழ்வில் படிந்து உறைந்து ஒன்றுபட்டது.

இளஞ் சூழலிடை நிலவைக்கான்றிக் கொண்டிருந்த திருமதி ஸிம்ஸனது திங்கள் வதனம் எப்படியோ வேல்ஸ் இளங்கோவைக் கவர்ந்தது. இளங்கோவின் நெஞ்சம் அத்திங்கள் நிலவில் ஈடுபட்டது. அந்நிலவு மழையில் அவர் மூழ்கினார்; திளைத்தார்; தண்மை அமுதை இனிது உண்டார். அவ்வமுதம் இருவருக்கும் கெழுதகை நட்பை உண்டாக்கிற்று. நட்பு, அரும்பி மலர்ந்து காய்த்து நாளடைவில் காதலாகிக் கனிந்தது.

வின்ஸர் கோமகனார் இளங்கோவாயிருந்த ஞான்றே அவர்க்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் காதல் விளைந்தது. அச்செய்தி காற்று வழியாகப் பறந்து ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் செவியில் நுழைந்திருக்கும். தொடக்கத்தில் அச்செய்தி கருவறையில் அடங்கி ஒடுங்கிக் கிடந்தது.

இளங்கோ, அரசராகிய பின்னர் அவர் திருமதி ஸிம்ஸனிடங் கொண்டுள்ள காதல் படிப்படியே வெளியாயிற்று. அக்காதற் செய்தி வெளியாக வேண்டுமென்பதே அரசரது விருப்பம். அது வெளியாகும் முறையிலேயே அவர் நடந்து வந்தார்.

எட்டாம் எட்வர்ட் பெல்விடியர் கோட்டையில் அடிக்கடி தேநீர் விருந்து வைப்பார். அதற்கென்று அழைக்கப்படுவோர் பெயர்களுடன் திரு. ஸிம்ஸன் பெயரும், திருமதி ஸிம்ஸன் பெயருஞ் சேர்க்கப்பட்டன. தேநீர் விருந்து காரணமாகத் திருமதி ஸிம்ஸன் பெல்விடியர் கோட்டைக்குப் பன்முறை போதருவார். திருமதி ஸிம்ஸனின் தோற்றம் பலருக்கு வியப்பூட்டியே வந்தது. பலர் பலவாறு பேசினர்.

முதலாவது அரச குடும்பத்தினர் நிலைமையை நோக்குவோம். அரச குடும்பத்தில் தலையாயார் மேரி ராணியாரே யாவர். அவர்தம் நெஞ்சம், எட்வர்ட்-ஸிம்ஸன் காதல்மீது படியலாயிற்று. அவரது நெஞ்சில் அவ்வெண்ணமே பெரிதும் குடிகொண்டது; வேறு எண்ணம் எழினும் அது நிலைத்து நிற்பதில்லை. தாய்மை நெஞ்சம் இருவர் காதலைப்பற்றி என்னென்னவோ நினைந்திருக்கும்!

ஒருநாள் எட்வர்ட் மன்னராகிய தம் புதல்வருடன் அவரது திருமணம் பற்றி, மேரி ராணியாராகிய அன்னையார் பேசுதல் நேர்ந்தது. அன்னையார் பரிவுடன் மைந்தர் முகநோக்கி, "எனது ஆருயிர் மைந்த! உனது மணத்துக்கு எதிர்ப்பு நாட்டில் பலமாயிருக்குமென்று நினைக்கிறேன்" என்று சொற்றனர். அதற்கு மைந்தர் "எதிர்ப்பு இராது. பொது மக்கள் என்பால் அன்புடையவர்கள்" என்று பதிலிறுத்தார். இப்பதிலால் மைந்தர் மனோ நிலையை அன்னையார் நன்கு உணரலானார். மைந்தர் மனோ நிலையை மாற்றல் அரிது என்பதையும் அவர் கண்டார்.

## சிலம்பொலி
### முடியா? காதலா?
அல்லது
### சீர்திருத்தமா?

திரு. வி. க.

அதற்குமேல் மேரி ராணியார் என் செய்தார்? திருமதி ஸிம்ஸனின் குணங்களை ஆராய முற்பட்டார். திருமதி ஸிம்ஸனுடன் அவர் உரையாடத் தொடங்கினார். இருவரும் நன்கு கலந்து கலந்து பேசலானார். அப்பேச்சின் பயனாக மேரி ராணியார்க்குத் திருமதி ஸிம்ஸனின் நல்லியல்புகள் பல புலனாயின. தம் மைந்தர்க்குத் தக்கவர் திருமதி ஸிம்ஸன் அம்மையார் என்னும் முடிவை மேரி ராணியார் பெற்றார்.

திருமதி ஸிம்ஸனின் அழகும், பழமை விருப்பும், கோயிலுக்குப் போதலும், இன்ன பிறவும் மேரி ராணியாரின் உள்ளத்தைக் கவர்ந்தன. மேரி ராணியார் பழமையில் விருப்புடையார் என்பதும், கோயிலுக்குப் போவோர் என்பதும் உலகறிந்தவை. தம்மியல்புகள் சில திருமதி ஸிம்ஸனிடத்தில் பொலிந்துள்ளமை மேரி ராணியாரை மயக்கிவிட்டது போலும்!

அன்னையாராகிய மேரி ராணியாரின் சம்மதத்தைப் பெற மைந்தர் முயன்றார்; முயற்சியில் வெற்றியும் பெற்றார். அரச குடும்பத்தின் தலைவர் கருத்தே மற்றவருடையதுமாயிற்று. அரச குடும்பத்தில் கருத்து வேற்றுமை அற்று விட்டது.

இரண்டாவதாக எவர்மீது மன்னர் பெருமான் கருத்துச் செலுத்தல்வேண்டும்? அமைச்சர் - முதலமைச்சர்-மீது என்று சொல்ல வேண்டுவதில்லை. கோடை காலத்தில் ஒருநாள் எட்டாம் எட்வர்ட் தம்முதல் அமைச்சர் திரு பால்டுவினையும் அவர்தம் மனைவியாரையும் தேநீர் விருந்துக்கு அழைத்தார். இருவரும் போந்தனர். திருமதி ஸிம்ஸனும் ஆங்கிருந்தார். எல்லாரும் விருந்துண்டனர். மன்னர் தங்கருத்தை முதல் அமைச்சரிடந் தெரிவித்தார். அதற்குப் பின்னரே மன்னர் துருக்கி முதலிய பல விடங்களுக்குத் திருமதி ஸிம்ஸனுடன் சென்றார். அச்செலவே நிலைமையை உலகறியச் செய்தது. ஆயினும் பத்திரிகை யுலகம் வாய் பொத்தியே கிடந்தது. இது பெரும் வியப்பு!

முடிசூட்டலிலும் திருமணத்திலும் சமயச்சடங்கு ஆற்றும் பொறுப்பேற்றுள்ள காண்டர்பெரி ஆர்ச்பிஷப்பும், திருமதி ஸிம்ஸனைப் பார்த்தல் நல்லது என்று மன்னர் கருதினர்; கருதியவாறே அவரையும் ஒருநாள் தேநீர் விருந்துக்கு அழைத்தனர். ஆர்ச்பிஷப்பும் அழைப்புக் கிணங்கிப் பெல்விடியர் கோட்டைக்குச் சென்றார். ஒரு சிறு கூட்டம் அங்கே வீற்றிருந்தது. அஃது இளங்காவெனத் திகழ்ந்தது. அதனிடை ஸிம்ஸன் மதிநிலவு பொழிந்து தண்மைவிருந் தூட்டிக்கொண்டிருந்தது. அதை பிஷப் கண்டார். அது பிஷப்புக்கு எரியூட்டிற்று. அவர் தம் மனம் வெகுண்டது; உதடுகள் துடித்தன; கண்களில் பொறிகள் பறந்தன; காதுகளில் புகை எழுந்தது; மெய் விதிர்விதிர்த்தது. பெரியவர் காலை பின்னே எடுத்து வைத்து வைத்துத் திரும்பினர்.

திரும்பினவர் யார்? பிஷப்-பெரிய பிஷப்; கிறிஸ்துவின் ஆலயத்தில் ஜெபஞ் செய்வோர்; கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப் பரப்புந் தொண்டேற்றிருப்பவர். அவர் ஓர் ஏழை மகளுடன் தேநீர் அருந்த விரும்பினரில்லை. அவர்க்கும், பாவிகளுக்காக வந்த எளிய கிறிஸ்துவுக்கும் ஏதாயினுந் தொடர்பிருக்குமா?

"பின்பு, வீட்டில் அவர் பந்தியிருக்கையில், இதோ, ஆயக்காரரும் பாவிகளும் அநேகர் வந்து இயேசுவோடும் அவர் சீஷரோடும் பந்தியிருந்தார்கள். அதைக் கண்ட பரிசேயர் அவர் சீஷரிடத்தில்: உங்கள் போதகர் ஆயக்காரரோடும் பாவிகளோடும் போஜனம் பண்ணுகிறதென்ன என்றார்கள். அவர் அதைக் கேட்டு:" 'பிணியாளிகளுக்கு வைத்தியன் வேண்டியதே யல்லாமல் சுகமுள்ளவர்களுக்கு வேண்டியதில்லை. நீங்களோ 'போய், பலியையல்ல இரக்கத்தையே விரும்புகிறேன் என்பதின் பொருளைக் கற்றுக்கொள்ளுங்கள்; நீதிமான்களையல்ல பாவிகளையே அழைக்க வந்தேன்' என்றார்."—மத்: 9 : 10-14.

இத்திருமொழியை நோக்குங்கள்; கிறிஸ்து பெருமானை நினையுங்கள்; அவர் பாவிகளிடை நின்று கண்ணீர் உகுக்குங் காட்சியைக் காணுங்கள்; கிறிஸ்து பெருமான் உலகுக்கு ஏன் வந்தார்? எவருக்காக வந்தார்! எவருக்காகச் சிலுவையில் தொங்கினர்! நேயர்களே! உன்னுங்கள்! அவரடித் தொண்டு செய்தற்கெனக் கோலங் கொண்டவர் பெரிய பிஷப். அவர் ஓர் எளிய பெண் அணங்கைக் காய்கிறார்! அவருடன் நீர் அருந்த மனங் கொள்ளாது திரும்புகிறார்! ஏன்?

பெரிய பிஷப் செல்வர்; செல்வத்தில் புரள்வோர் நேயர். அவர் எளிய கிறிஸ்துவுக்கு எங்ஙனம் நேயராதல் கூடும்? கிறிஸ்து பெருமானுக்கு வேண்டுவது அன்பு; வெறுங் கோலமன்று.

"வேதபாரகரைப்பற்றி எச்சரிக்கையாயிருங்கள். அவர்கள் நீண்ட அங்கிகளைத் தரித்துக்கொண்டு திரிய விரும்புகிறார்கள். சந்தை வெளிகளில் வந்தனங்களையும் ஜெபாலயங்களில் முதல் ஆசனங்களையும் விருந்துகளில் முதல் இடங்களையும் விரும்புகிறார்கள். விதவைகளின் வீடுகளையோ பட்சித்துப் பார்வைக்கு நீண்ட ஜெபஞ் செய்கிறார்கள். அவர்கள் அதிகத் தண்டனை பெறுவார்கள் என்றார்."—மார்க்கு: 12 : 38-40.

என்றும்,

"மாயக்காரராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ உங்களுக்குக் கேடாம்! வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள். அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப்படும். உள்ளேயோ மரித்தவர்களின் எலும்புகளும் சகல அசுத்தங்களும் நிறைந்திருக்கின்றன. அப்படியே நீங்களும் புறம்பே மனுஷருக்கு நீதிமான்களென்று காணப்படும் உள்ளேயோ மாயத்தினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்திருக்கிறீர்கள்."—மத்: 23 : 27-8.

என்றும் கிறிஸ்து பெருமான் திருவாய் மலர்ந்துள்ள மெய்ம்மொழிகளை நோக்குக; நோக்கிப் பிஷப்பின் நிலையை ஆராய்க.

மேல்நாட்டில் பிரபுக்கள் (முதலாளிகள்) கூட்டமென்று ஒன்றுண்டு. அக்கூட்டத்தின் ஆக்கத்துக்கென்றே பிஷப்புகள் வாழ்கிறார்கள். அவர்கள் எங்ஙனம்,

"அவர் வழிநடக்து வெளியே செல்லுகையில் ஒருவன் அவரிடம் ஓடிவந்து முழங்கால் படியிட்டு: நல்ல போதகரே, நித்திய ஜீவனைச் சுதந்தரிப்பதற்கு நான் என்ன செய்யவேண்டுமென்று கேட்டான். அதற்கு இயேசு: நீ என்னை நல்லவர் என்று சொல்வானேன்? கடவுள் ஒருவரே தவிர நல்லவர் ஒருவருமில்லையே. நீ கற்பனைகளை யறிவாய்: கொலை செய்யாதே, விபசாரஞ் செய்யாதே, களவு செய்யாதே, பொய்ச்சாட்சி சொல்லாதே, வஞ்சனை செய்யாதே, உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணு என்பவைகளே என்று சொல்ல அவன்: போதகரே, இவைகளையெல்லாம் என் சிறு வயதுமுதல் கைக்கொண்டிருக்கிறேனென்றான். இயேசு அவனை உற்று நோக்கி அவனில் அன்பு கூர்ந்து: உன்னிடம் ஒரு குறைவு உண்டு, நீ போய் உனக்குண்டானவைகளை விற்றுத் தரித்திரருக்குக் கொடு: அப்பொழுது பரலோகத்தில் உனக்கு ஐசுவரியமிருக்கும்; அப்பால் வந்து என்னைப் பின்பற்று என்றார். அவன் மிகுந்த ஆஸ்தியுள்ளவனாயிருந்தபடியால் இந்த வார்த்தையைக் கேட்டு முகம் வாடித் துக்கத்தோடே போய்விட்டான்.

அப்பொழுது இயேசு சுற்றிப்பார்த்துத் தமது சீஷரிடம்: ஐசுவரியமுள்ளவர்கள் கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிது என்றார். சீஷர் அவருடைய வார்த்தைகளைக் கேட்டுப் பிரமித்

துப்போனுர்கள். இயேசு பின்னும் அவர்களைப் பார்த்து : பிள்ளைகளே, கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிது. ஐசுவரியவான் கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப்பதைக் பார்க்கிலும் ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளிது என்றுர்.''—மார்க்கு: 10 : 17-25.

என்று அருளிய கிறிஸ்துவின் தொண்டர்களாயிருத்தல் கூடும் ?

மேல்நாடு அமைப்பில் பேர்பெற்றது. அவ்வமைப்புப்பேய்சமயத்திலும்நுழைந்துகொண்டது. மேல்நாட்டில் கிறிஸ்துவின் பெயரால் அமைப்புகள் நன்முறையில் நிறுவப்பட்டுள்ளன. அவ்வமைப்புகள், அரசியலார் அமைப்புகளைப் போலவே கடனுற்றி வருகின்றன. அமைப்புகளுக்கு அடிமை பூண்ட மேல்நாடு அன்புக் கிறிஸ்துவை மறந்துவிட்டது. அமைப்புகளால் பணம் பெருகப் பெருக,பணத்தால் பாதிரிக்கூட்டம் பெருகி நிற்கிறது.மேல்நாடு ஒரு பெரிய சுடுகளமாய் - வெடி நிலனுயிருப்பதற்குக் காரணம் என்ன? கிறிஸ்துவின் அன்பு ஆண்டுப் பரவாதிருப்பதேயாகும். கிறிஸ்துவின் பெயரால் அமைப்புகள் ஆயிரக்கணக்கில் கிடக்கின்றன. கிடந்தும் பயனென்ன ? அவைகளில் அன்புக் கிறிஸ்துவுக்கு இடமுண்டோ ?

"என் வீடு ஜெபவீடு எனப்படுமென்று எழுதியிருக்கிறது. நீங்களோ அதைக் கள்ளர்குகைகளாக்குகிறீர்களே என்றுர்."
—மத்தேயு : 21 : 13

"என் பிதாவின் வீட்டை வியாபார வீடாக்கவேண்டாம்"—யோவான்: 2: 16.

மேல் நாட்டில் பிஷப்புகள் பிரபுக்களுக்காக வாழ்கிறுர்கள் ; கிறிஸ்துவுக்காக வாழ்கிறுர்களில்லே. அதனுல் அந்நாடு கொலைக்களனுய்விட்டது.

காண்டர்பெரி ஆர்ச்பிஷப் செயலைச் சிந்தியுங்கள். அவர் கிறிஸ்துவை மறந்தே திருமதி ஸிம்ஸனை வெறுத்தார். எளிய ஸிம்ஸனைக் கருணைக் கிறிஸ்து காப்பாராக.







# எதிரொலி

## கல்வியின் அவசியம்

பிரிட்டனைவிட இந்தியாவின் கல்வி, மிகுந்த பிரயோசனமுள்ளதாக இருத்தல் வேண்டும். அக்கல்வியே இந்தியாவின் வருத்தங்களைப் போக்கி விவசாயத்தையும் விருத்திசெய்தல்வேண்டும். மதம், குலம் முதலிய சண்டைகளையும் தாழ்த்தல் வேண்டும். இந்தியாவில் உள்ளவர் எல்லாரும் சகோதரர் என்ற கூட்டுறவை உண்டாக்க வல்லது கல்வியே.

—'மான்செஸ்டர் கார்டியன்'

## கிரிக் பாடம் கற்பாரா ?

இங்கிலாந்து தேசியப் பாதுகாப்புக்கு வேண்டிய பணம் அரசாங்க வசம் இருக்கும்வரை மக்களின் மீது புது வரிகளை ஏன் சுமத்தல் வேண்டுமென்று பண நிர்வாக மந்திரியாயிருந்த நெவில் சேம்பர்லன் கூறினர். மூளையில்லாமலிருந்தாலல்லவோ இப்புது வரிகளை விதித்தல் வேண்டு மென்றுர் அவர். ஆனல் நமது நாட்டு நிதிமந்திரியான ஸர் ஜேம்ஸ்கிரிக் என்ன செய்தார் ? அசெம்பிளி எதிர்ப்பையும் மாகாணங்களின் அதிருப்தியையும் மீறி சர்க்கரை மீது வரி சுமத்தினர். இதனுல் தேசம் எவ்வளவு பாடுபடுகிறது. இப்போது ஸர் கிரிக் இங்கிலாந்து சென்றிருக்கிறுர். நெவில் சேம்பர்லனிடமாவது பாடம் கற்றுக் கொண்டு வருவாரா ?

—'இந்துஸ்தான் டைம்ஸ்'

## அரசாங்கத்தின் செல்வப் பிள்ளை

'மந்திரிசபை அமைத்தல் வேண்டும் என்று கவர்னர் எனக்குக் கட்டளையிட்டபோது நான் மந்திரிசபை அமைக்காமல் இருக்கமுடியுமா ? என்று ஸர் கே. வி. ரெட்டி கூறினர். ஆமாம் முடியாதுதான். ஏன் ? அம்மகா புருஷருடைய பொதுநலசேவையைக் கவனித்து வந்தவர் இதை ஆச்சரியமாகவே கருதமாட்டார். சென்ற இருபது வருஷங்களாக அவர் அரசாங்கத்தின் செல்வப் பிள்ளையாக இருந்தார். அதனுல் அவர் தேச நன்மையைத் தியாகம் செய்தாவது கவர்னர் கட்டளையை நிறைவேற்ற வேண்டுவது அவசியமாகும். ஆனல் ஒன்றை மட்டும் அவர் மறந்துவிட்டார். தமது அடிமைப் புத்தியை இவ்வாறு பொதுக்கூட்டங்களில் கூறிக் கொள்வது சுய மதிப்புக்குக் குறைவு என்பதை எண்ணவில்லை போலும்.

—'அ. பத்திரிகா'

## மகாத்மாவின் புகழ்

இப்போது இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் அரசியல் நெருக்கடியை அரசியல் சத்தியாக்கிரகம் என்னுது வேறென்ன சொல்வது? இராஜப்பிரதிநிதி மகாத்மாகாந்தியோடு கலந்துபேசினுல் இந்த நெருக்கடி நீங்குவது திண்ணம். மகாத்மாவும் அவ்விதப்பேச்சுக்குத் தடைகூறமாட்டார். இந்நெருக்கடியைப் போக்கக்கூடியவர் மகாத்மாவே.

இந்நெருக்கடி வளரவளர இந்தியாவில் மகாத்மாவின் வாக்குக்கு மதிப்பு உண்டாகிறது. அவருக்கு எவ்வித அரசியல் அதிகாரமும் இல்லை. சேனையாவது இருக்கிறதா ? அவர் சொற்படி கேட்க ஒரு தாணுக்காரன்கூட இல்லை. இப்பூமியில் உள்ள எல்லாரையும் விட அவர் பலருடைய நன்மதிப்பைப் பெற்றிருக்கிறுர். இஃது ஓர் ஆச்சரியமல்லவா ? இது வரையில்யாராவது ஆத்ம வாழ்க்கையின் பயனை அவ்வளவு புகழ் பெற்றதுண்டா ?

—'யூனிடி'

## உண்டவீட்டுக்குத் துரோகம்

சிம்லா காதி வஸ்திராலயத்தின் மீது பறந்து கொண்டிருந்த தேசியக் கொடியை ஓர் ஐரோப்பியர் பிடுங்கிவிட்டாராம். எந்த ஐரோப்பியராவது இந்தியாவின் தேசியக்கொடியை காணக் கூசப்படுவாராயின் அவர் இந்தியாவில் ஏன் இருத்தல் வேண்டும் ? தமது நாட்டுக்கே திரும்பிப்போய் விடலாமே. அவரை 'வா' என்று யாரும் வரவேற்கவில்லை. போய்விடுகிறுரே யென்று கஷ்டப்படுவோரும் இலர். இந்தியாவில் அறியாமையை வளர்க்க அவர் துணைசெய்தல் ஆகாது. அஃது அவருடைய சுய மதிப்புக்கும் பங்கம் செய்தல் ஆகும்.

அவர் இந்தியாவின் உணவை உண்ண விரும்பினுல் அவ்வுணவைத் தரும் இந்தியாவுக்கு நன்றி யறிதலுள்ளவராக இருத்தல் வேண்டும். அதைவிட்டுத் துரோகமான காரியங்களைச் செய்வது உண்ட வீட்டில் துரோகம் செய்ததாகும்.

—'ஸர்ச்லைட்'

## ஆங்கிலேயரை நம்பாதே

ஆங்கிலேயரில் சிலர் இந்தியாவிடத்து அன்புள்ளவர் போன்று காட்டிக்கொள்கிறுர். அவ்வாங்கிலேயர் இந்தியாவின் பூர்ணசுய ஆட்சிக்கோ அல்லது குடியேற்ற நாட்டந்தஸ்துக்கோ பாடுபடமாட்டார். இந்தியர் தம்மையே இந்தியர்க்கு உதவும். இச்சிலர் பிரிட்டிஷார் ஆட்சியின் குறைகளைக்கூறிக் கொண்டே காலத்தைக்கழிப்பர். இங்கிலாந்தில் இவர்தம் பேச்சைக்காதில் போட்டுக்கொள்பவர் இலர். அதனுல் இந்தியர் அச்சில ஆங்கிலேயர் கூறுவதை நம்புதல் கூடாது ?

எந்த ஆங்கில வியாபாரியும் இந்தியாவுக்குப் பூர்ண விடுதலை கிடைக்கச் சம்மதியான். ஏன் ? தன் பிழைப்புக்கு மோசம் வந்து விடும். ஒன்று அல்லது இரண்டு ஆங்கிலேயர் நம்மோடு பழகும்போது வேஷ்டிகளைக் கட்டிக்கொண்டும் புடவைகளை உடுத்திக்கொண்டும் இருப்பதால் அவர் நம்மிடத்து அனுதாபம் உடையவரென்று நினைத்தல் கூடாது.

—'தி இந்தியன்'

## இந்திய மந்திரியின் பாய்ச்சல்

1919-ம் ஆண்டில் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தங்கள் இந்தியாவுக்கு வழங்கப்பட்டபோது இந்தியர் சந்தோஷப்படவில்லை. அப்போது பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் அச்சீர்திருத்தங்களை ஸ்தல சுயாட்சியின் முதற்படி என்றுர்கள். இஃது இருபது வருஷங்களுக்கு முன் நடந்த விஷயம். இந்தியாவின்மீது வைத்த அன்பால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தில் இந்தியாவுக்கு ஒரு மதிப்பை உண்டாக்க எண்ணிப் பிரிட்டிஷ்அரசாங்கம் இந்தியாவுக்குப் பூரண சுயராஜ்யத்தின் சத்தாகிய புது அரசியல் திட்டங்களைவழங்கியது. இது மாகாணசுயாட்சி. மகாத்மா காந்தி இது மோசமென்றும் சுயஆட்சி அதில் கிஞ்சித்தேனும்இல்லை யென்றும் கூறுகிறுர். இந்திய மந்திரி-லார்ட் ஜெட்லந்து - இதைப் பொறுத்துக்கொண்டிருப்பாரா ? மகாத்மாமீது பாய்கிறுர். " தாங்கள் புதிய சட்டத்தைப் படிக்கவில்லை. ஒருவேளை படித்திருந்தாலும் அதன் உண்மைப் பொருளை அறிந்து கொள்ளவில்லை " என்கிறுர்.

—'தங்கனியாகா ஒபினியன்'

## எப்படிப் பொம்மையானுர் ?

பித்தளைத் தொழிலில் ஜம்னுதாஸ் மேதா கெட்டிக்காரர். அதனுலேயே அவர் அடிக்கடி மாறுகிறுர். இல்லாவிட்டால் அவர் ஒரு காங்கரஸ் வாதியாக இருந்திருக்கமுடியாது. பின்னர் ஹிந்து மகா சபையைச் சேர்ந்தார் ; பக்கா சனுதனியானுர் ; பிறகு சமூக சீர்திருத்தக்காரரானுர் ; வியாபார சங்கத் தலைவரானுர் ; ஒரு சமயம், சமதர்ம வாதியாகவும் பொதுஉடைமையின் எதிரியாகவும் இருந்தார். அவர் ஒரு பொம்மை என்றுல் கோபித்துக் கொண்டார். அந்தக் கோபத்தைக் காங்கரஸ்மீது காட்டினுர். காங்கரஸில் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு பேர் பொம்மைகளாம். ஆமாம். குடியாட்சி பற்றிப் பேசும் இந்நாளில் சிறிது தூரம் பொம்மைகளாகவே இருத்தல் வேண்டும். காங்கரஸ்காரர் தம்மையே தாம் பொம்மைகளாகச் செய்து கொண்டார். அவர்களுக்கு ஒரு கட்டுத்திட்டம் இருக்கிறது.எம்முறையுமில்லாத இவர் வேண்டப்படாத ஓர் அரசியலுக்கு எப்படி பொம்மையானுர்? அதோடு நில்லாமல் அந்த அரசியலைச் சிருஷ்டித்தவருடைய கையில் இவர் விளையாடும் பொம்மையாய் விட்டாரே ! பாவம்.

—'காங்கரஸ் சோஷலிஸ்ட்'

## ஸஹாராவில் 'ஐஸ்' விற்பவர் !

ஸ்ரீ இராஜகோபாலாச்சாரியார் கெட்டவரென்றும், அவரது தடுக்குத்தனத்தாலேயே புது அரசியல் அளிக்கக் கூடிய வரப்பிரசாதங்கள் பல, மக்களுக்கு அளிக்கப்படவில்லை யென்றும், மக்கள் ஏமாற்றப்பட்டார்கள் என்றும் மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்ற ஆவல் பிடரியைப் பிடித்து உந்தினதால் சென்னை 'அல்பாய்சு மந்திரிகள்' துண்டுப்பிரசுரம் வழங்கியிருக்கிறுர்கள். துண்டுப் பிரசுரங்கள் மூலம் பொது ஜனங்களைத் திருப்தி செய்துவிடலாமென்ற யோசனை எவரது அபூர்வமான மூளையில் தட்டுப்பட்டதோ தெரியவில்லை. வங்காளத்தில் அத்துண்டுப் பிரசுரங்களைக் கடைக்காரர்கள் சாமான் கட்ட உபயோகிக்கிறுர்கள் சிலர் அடுப்பெரிக்கின்றனர். சிறு பிள்ளைகள் அத்துண்டுப் பிரசுரங்களைக் கிழித்துக் காற்றுடிசெய்து பறக்கவிடுகிறுர்கள். ஸஹாரா பாலை வனத்தில் 'ஐஸ்' விற்பவரைக் காண முடியுமா அதேபோல அத்துண்டுப் பிரசுரங்களைப் படிப்பவரைக் காண முடியவில்லை !

—"அமிர்த பஜார்"

## நபருக்கு 5 பவுன் தானம்

கானடாவிலுள்ள ஆல்பெர்டா என்ற மாகாணத்தில் தற்போது உலகத்தை வாட்டிவரும் பொருளாதார நெருக்கடியைச் சரிப்படுத்த ஒரு புதிய முறை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அந்நாட்டிலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் அரசாங்கம் மாதம் ஒன்றுக்கு ஐந்து பவுன் நோட் ஒன்றைக் கொடுக்கிறது. அந்த நோட்டைக் கொண்டு ஏழைமக்கள் தங்களுக்கு வேண்டிய உணவுச் சாமான்களைக் கடைகளில் வாங்கிக் கொள்ளலாம். கடைக்காரர் அந்நோட்டுக்களைத் தொழில் முதலாளிக்குக் கொடுப்பார்கள். இப்படியே மாறிமாறி அந்த நோட்டுகள் அரசாங்கத்துக்கு வந்து சேர்கின்றனவாம். இதனுல் பொருளாதார நெருக்கடியும் ஏழைமக்களின் கஷ்டங்களும் நீங்கிவிடுமென்று அவ்வரசாங்கம் நினைக்கிறது. இம்முறைக்குக் காரணராய் இருந்தவர் முதல் மந்திரியான திரு. வில்லியம் அபெர்ஹார்ட். அவருக்கு வயது ஐம்பத்தேழு.

அஜ்மீர் ஜில்லாவைச் சேர்ந்த ராமா...யில் ஒரு கன்றின் தலைமட்டும் மனிதத் தலைபோன்று இருக்கிறதாம். அதற்கு எட்டுக் கால்களும் இரண்டு வால்களும் இருக்கின்றன.






## 'தாய் நாட்டுக்கு உதவுங்கள்'

### மலேயாவுக்குச் சங்கங்கள் அவசியம்

### மலேயாவில் ஜவஹர் வீர முழக்கம்

ஜவஹர் மலேயாவில் சுற்றுப் பிரயாணம் செய்கையில் கூபு மைதானத்தில் ஒரு பெரிய பிரசங்கம் செய்தார்.

பின்னர் சேரம்பனுக்குச் சென்றுர். அங்கு அவரை வரவேற்ற டாக்டர் கிருஷ்ணன்,ஜவஹருடைய புகழ் எல்லா வீடுகளிலும் பேசப்படுகிற தென்று கூறினுர். ஜவஹர், வரவேற்புக்குப் பதிலளிக்கையில் "மலேயாவின் பாலுக்கும் தேனுக்கும் நான் ஆசைப்படுகிறேன். இந்தியாவில் மக்கள் பசியால் கஷ்டப்படுகிறுர்கள். மலேயாவில் வாழும் நீங்கள் அதிர்ஷ்டம் செய்தவர்களே" என்று கூறினுர்.

க்ஜாங் முதலிய இடங்களுக்குச் சென்ற பிறகு ஜவஹர் கிலாங்குக்குச் சென்றுர். அங்குப் பேசியபோது அவர் 'தொழிலே தற்கால வாழ்வின் உயிர் நாடி. மலேயாவில் சிறந்த உலோகப் பொருள்களும், பெரிய காடுகளும் இருப்பது பற்றி நான் சந்தோஷிக்கிறேன்' என்று கூறினுர்.

### இந்தியாவும் மலேயாவும்

பின்னர் அவர் பேசியது வருமாறு:-

"சகோதரர்களே ! நான் மலேயா நாடு முழுவதும் சுற்றினேன் நான் எங்கும் சந்தோஷமாக வரவேற்கப்பட்டேன். இவ் வரவேற்புகளுக்கு அடிப்படையாக இருப்பது என்ன ? இந்தியாவின் சுதந்திரத்துக்காக நீங்கள் என்ன செய்தீர்கள் ? இந்தியாவை விட்டு நீங்கள் தனியாக இருக்கமுடியாது. இந்தியா சுதந்திரமுள்ள நாடாக இருந்தால் அது உங்களைப் பாதுகாக்கும். சுதந்திரமில்லாவிட்டால் என்ன செய்வது ? தற்போது இந்தியாவை பசிப்பிணி வாட்டுகிறது.

"ஒருசிலர் பெரிய உத்தியோகங்கள் பெற்றுவிடுவதால் இந்தியா சுதந்திரமுள்ள நாடாகாது. முப்பத்தைந்து கோடி மக்களுக்கும் சுதந்திரம் வேண்டும்.

"உலகத்தில் எல்லா சமூகங்களும் பல கஷ்டங்களுக்குட்பட்டே முன்னேற்றமடைந்தன. தற்போது இந்தியாவும், சீனமும் அவ்வித கஷ்டங்களுக்குட்பட்டிருக்கின்றன. இச் சமயத்தில் தாய்நாட்டுக்கு உதவிபுரிய வேண்டுவது உங்கள் கடமை. கதரை ஆதரியுங்கள். கதரை வாங்குவதால் நீங்கள் இந்திய ஏழைகளுக்கு உதவி செய்தவராவீர்கள்."

மலேயா தொழிலாளர்களுக்காகப் பண்டிதர் பத்திரிகைகளுக்கு ஒரு செய்தி விடுத்திருக்கிறுர். அதன் சாரம் வருமாறு:—

### தொழிலாளர் சங்கங்கள்

"மேற்கு நாடுகளில் தொழிலாளர் சங்கங்கள் பல இருக்கின்றன. அச்சங்கங்களின் உதவியாலேயே அந்நாட்டுத் தொழிலாளர் முன்னேறி விட்டனர். மலேயாவில் முதலாளிகளுக்குள் ஒற்றுமை இருக்கிறது. அவர்கள் அரசாங்கத்தைப் பயமுறுத்தித் தங்கள் வசமாக்கிக் கொள்கிறுர்கள். இடையில் கஷ்டப் படுவோர் தொழிலாளரே.

"முதலாளிகளுடைய ஆக்கம் பெற்ற அரசாங்கம் தொழிலாளிகளுக்கு உதவி செய்யாது. அந்நாடுகளில் முதலாளிகளும் தொழிலாளரும் தனித்தே நிற்பார்கள்.

"சில வருஷங்களுக்கு முன் பிரதம மந்திரியாக விருந்த டிஸ்ரேலி ஏழைப் பணக்காரரைக் குறித்து ஒரு புத்தகம் எழுதியிருக்கிறுர். இவ்விரு குழுவினரும் எவ்வாறு ஒன்றுபடாமல் விலகியிருக்கிறு ரென்பதை அவர் குறிப்பிட்டிருக்கிறுர். அவர் அக்காலத்து ஆங்கில மக்களைக் கண்டு எழுதினுர். அஃது இக்காலத்து எல்லா நாடுகளுக்கும் பொருத்தமாக இருக்கிறது.

"தற்போது மலேயாவிலுள்ள தொழிலாளர்களுக்கு வேண்டுவதென்ன ? அவர்களுள் சங்கங்கள் அமைத்தல் வேண்டும். தொழிலாளர் முன்னேற்றத்துக்காக அச்சங்கங்கள் கூலியைப்பற்றியும், வேலை நேரத்தைப் பற்றியும் வேண்டிய திட்டங்களைச் செய்யும்.

### மதுபானம் செய்யாதே

"இறுதியாக நான் உங்களை ஒன்று வேண்டிக் கொள்கிறேன். நீங்கள் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கும் சம்பளத்தை மதுபானக் கடைகளில் கொட்டிவிடாதீர்கள். இந்தியாவிலும் மதுபானக்கடைகளை ஒழிக்க நாங்கள் முயன்று வருகிறோம்.

"கங்காணி முறை ஒழிதல்வேண்டும் நான் இவ்விஷயத்தில் மட்டும் சாஸ்திரியோடு சம்மதிக்கின்றேன். இந்தியாவின் தேசிய அரசாங்கம் வெளிநாடுகளிலுள்ள இந்தியத்தொழிலாளர்களைக் குறித்துப்பாடுபடும்."

சிட்டகாங்கில் ஜவஹருக்குப் பெருமித வரவேற்பளிக்கப்பட்டது. பண்டிதர் பெரிய பொதுக்கூட்டமொன்றில் பேசும்பொழுது பயங்கரப்புரட்சி இயக்கத்தைக்கண்டித்தார். வங்க அரசாங்கம் பந்தோபஸ்துக் கைதிகளை விடுதலை செய்யவிருக்கும் இத்தருணத்தில் பண்டிதர் பயங்கரப்புரட்சி இயக்கத்தைக் கண்டித்தது சமயத்துக்கு ஏற்றதாகும். சிட்டகாங் மக்கள் மீது விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடான விதிகளை அவர் கண்டித்தார்.

# கலம்பகம்

லெனினின் சகோதரியான மாடம் மரியா உலியனேவா என்பவர் இறந்தார்.

o o o

காங்கரஸ் காரியக் கமிட்டி இன்னும் இரண்டொரு வாரங்களில் வார்தாவில் கூடும்.

o o o

கொழும்பு ஸ்ரீ கதிர்வேலாயுத சுவாமிக்கு 22-7-37 முதல் 25-7-37 முடிய இரத மகோற்சவம் நடைபெறும்.

o o o

கல்கத்தா நகரை அழகுபடுத்த 6,16,000 ரூபாய் செலவழிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

o o o

காட்டுமன்னர் கோயிலில் திரு. ஆர். பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள் தலைமையில் வாலிபர் மகாநாடு ஒன்று நடைபெற்றது.

o o o

நியூஸ் பிரிண்ட் காகிதத்தின் மீது விதிக்கப்பட்டிருக்கும் வரியைக் குறைக்க அரசாங்கம் தீர்மானித்திருப்பதாக அறிகிறோம்.

o o o

ராஜபாளையத்துக்கு அருகிலுள்ள ஆவாரம்பட்டியில் ஆண்டிபட்டி திரு. கருப்பசாமி அவர்கள் தலைமையில் சாலியர் மகாநாடு ஒன்று நடைபெற்றது.

o o o

நாடார் கிளர்ச்சியின் பயனுக நாடார் சமூகத்துக்குச் சொந்தமான சகல சிவகாசிக் கோயில்களும் எல்லா ஜாதியினருக்கும் திறந்து விடப்பட்டனவாம்.

o o o

ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களில் படிக்கும் ஹரிஜன மாணவர்களுக்குப் புத்தகம் வாங்கக் கடலூர் ஜில்லா போர்டு ஆயிரம் ரூபாய் அளித்திருக்கிறது.

o o o

கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியில் இண்டர்மீடியட்வகுப்பில்இதுவரை இருந்து வந்த தர்க்கபாடபோதனைப் பிரிவு இவ்வருஷம் முதல் எடுக்கப்பட்டு விட்டது.

o o o

பர்மாவிலுள்ள இந்தியப் பாதுகாப்புக் கைதிகளை விடுதலை செய்யவேண்டி இந்தியர் தூதுக் கோஷ்டியொன்று பர்மிய உள் நாட்டு மந்திரியைப் பேட்டி காணும்.

o o o

சுரங்கங்களில் பெண்கள் வேலைசெய்யக் கூடாதென்ற விதியை ஜூலைமுதல் தேதிமுதல் அரசாங்கம் அமுலுக்குக் கொண்டுவர எண்ணியிருந்தது. இப்பொழுது அந்தத் தேதி அக்டோபர் முதல்தேதிக்கு ஒத்திவைக்கப் பட்டிருக்கிறது.

o o o

கோவை ஜில்லா அரசியல் மகாநாடு கூனூரில் ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி தலைமையில் நடைபெற்றது. கோவை ஆலைத்தொழிலாளர் நிலைமையை விசாரிக்க ஓர் உப கமிட்டி நியமிக்குமாறு தமிழ் நாட்டுக் காங்கரஸ் கமிட்டியை வேண்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

o o o

காஞ்சிபுரம் மெய்கண்டார் கழகம், சேக்கிழார் திருநாளன்று (12-6-'37) திருமுறைத் திருவிழா நடத்தியது. அன்று மாலை 'சேக்கிழார்' என்னும் பொருள்பற்றி விரிவுரை நிகழ்ந்தது. 'நவசக்தி' ஆசிரியர் திருவாளர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்கள் தலைமை வகித்தார்கள்.

o o o

திருச்சி தாலுக்கா அரசியல்மகாநாடு இம்மாதம் 27-ந் தேதி பொன்மலையில் நடைபெறும். தோழர் மஸானி தலைமை வகிப்பார். திரு. எஸ். ராமநாதன் மகா நாட்டைத் திறந்து வைப்பார். தோழர் ஜீவானந்தம் கொடியேற்றுவார். திரு. என். எம். ஆர். சுப்பராமன் ஸ்ரீமதி கமலாநேருவின் உருவப் படத்தைத் திறந்துவைப்பார்.

o o o

பஞ்சாயத்துக் கல்வி மகாநாடு திருத்தங்காலில் திரு. இராமசாமி நாயுடு தலைமையில் நடைபெற்றது. ஆரம்பக் கல்வியைப் பரப்பும் விஷயம் பஞ்சாயத்து போர்டுகளிடமே ஒப்படைக்கப் படவேண்டுமென்றும், பஞ்சாயத்துப் பள்ளிக்கூடங்களை மேற்பார்வை செய்ய ஒரு கமிட்டி நியமிக்கப்பட வேண்டுமென்றும் இரு தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

o o o

திருப்பனந்தாளுக்கு அருகே வடுவக்குடி என்று ஓர் ஊரிருக்கிறது. அங்கே சுவாமி புறப்பட்டமையால் அதிர்வெடி போடப்பட்டது. ஒருதரம் வெடிபோட்டதும் வெடிக்குழாய் ஆறவேண்டுமல்லவா ? அவ்வாறு ஆறுவதற்குமுன் மேலும் மருந்தைக் கொட்டி இருவர் கெட்டித்தனர். மருந்து வெடித்தது. இருவருக்கும் படுகாயம். ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோகப்பட்டதும் ஒருவர் இறந்தார். இன்னெருவர் நிலை கவலைக் கிடந்தருவதாயிருக்கிறது.

o o o

சென்னை மயிலாப்பூர் போஸ்ட் மாஸ்டர் வீட்டில் ஒரு துணிகரக் கொள்ளை நடந்தது. போஸ்ட்மாஸ்டர் சாயங்காலம் கோயிலுக்குப் போயிருந்தபொழுது ஒரு காரில் ஒரு பெண்ணும் புருஷரும் வந்து இறங்கி வீட்டுக்குள் சென்று போஸ்ட் மாஸ்டரின் மனைவியைத் தூணோடு சேர்த்துக் கட்டி, வாயில் துணி அடைத்து எழுநூறு ரூபாய் பெறுமான நகையைக் கொண்டுபோயினர். போஸ்ட் மாஸ்டர் வந்து மனைவி தூணோடு கட்டப்பட்டிருப்பதைப் பார்த்துவிட்டுப் போலீஸுக்குத் தெரிவித்தார்.



## பெண்ணில்லா நாடு

தென் அல்பேனியாவில் இருப்பவர் அனைவரும் முகம்மதியர். அங்குப் புதிய சட்டம்ஒன்று இயற்றப்பட்டிருக்கிறது. அச்சட்டப்படி பெண்கள் முகமூடிகளை நீக்கிவிடுதல் வேண்டும். முஸ்லிம் ஆண்மக்கள் இதை விரும்பவில்லையாம். அரசாங்கச் சட்டத்தை முஸ்லிம் அஸோஸியேஷனும் ஆதரித்துப் பெண்கள் வெளியில் செல்லலாமென்றும் பொதுக்கூட்டங்களில் பேசலாமென்றும் கூறுகிறது. ஆயினும் இச்சீர்திருத்தத்தை விரும்பாத ஆண்மக்கள் பெண்களை வீடுகளில் அடைத்து வைத்திருக்கிறுர்களாம். அதனுல் பெண்கள் வெளியில் தலைகாட்டுவது இல்லை.

## ஹிமாலயத்தின் மீது படையெடுப்பு

இவ்வருஷம் ஹிமாலயத்தின் மீது ஏராளமான கோஷ்டிகள் படையெடுக்கப்போகின்றன. டாக்டர் வீயர் கோஷ்டி ஏற்கனவே நங்கபர்வதத்தில் வேலைசெய்து கொண்டிருக்கிறது. ஷிப்டன் கோஷ்டியார் காரகோரம் பர்வதத்துக்குச் செல்லப்போகின்றனர். ஸ்மித் கோஷ்டியார் கார்வால் சிகரத்துக்குச் செல்வர். புரொபஸர் துக்சி என்பவரை இதாலி அனுப்பியிருக்கிறது. அவர் சரித்திரம், கல்வெட்டு முதலிய ஆராய்ச்சிகளைச் செய்வார்.

## அபூர்வமான புத்தகம்

ஒரே நாளில் உலகில் நடப்பதென்ன ?

இதுவரை வெளியிடப்படாத ஓர் அபூர்வமான புத்தகம் இப்பொழுது லெனின் கிராடில் வெளியிடப்பட்டுளது. 'உலகின் ஒருநாள்' என்பது அப்புத்தகத்தின் பெயர். மாக்ஸிம் கோர்க்கி கூறிய யோசனையின்படி அப்புத்தகம் எழுதப்பட்டதாம். 1935-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 27ந் தேதி உலக முழுவதும் என்ன நடந்தது என்பது பற்றி அப்புத்தகம் விவரிக்கிறது. 1100 பக்கத்தில் பலரால் அப்புத்தகம் எழுதப்பட்டது.

## கிழவர் திருமணம்

கரூருக்கு அடுத்துள்ள தான் தோன்றிமலையில் வேடசெந்தூர் திரு. ரெ. சடையப்பசெட்டியாருக்கும் திருமதி இரத்தினம்மாளுக்கும், விவாகம் நடந்தது. மணமகன் வயது 65. மணப்பெண்ணின் வயது 13. மணமகனுக்கு முதல் மனைவியும் ஏழு பெண்களும் இருக்கிறுர்கள். இவர்களில் ஐந்து பெண்களுக்கு விவாகம்நடந்துவிட்டது. அவரது மாப்பிள்ளைகளும் பெண்களும் விவாகத்திற்கு வந்திருந்தார்கள். இது தான்தோன்றிமலையில் நடந்த தான் தோன்றிக் கலியாணமல்லவா ?

## ஆமதாபாத் ஆலையில் சத்தியாக்கிரகம்

ஆமதாபாத் ஸ்ரீநகர் ஆலைத் தொழிலாளர் சம்பள விஷயத்தை மத்தியஸ்த போர்டுக்குவிட அதிகாரிகள் மறுத்தார்களாம். அதனுல் தறிபோடுவோர் 400 பேர் வேலை செய்யாமல் ஆலைக்குள் ளிருந்து சத்தியாக்கிரகம் செய்கின்றனர். தொழிலாளர்க்கு உறவினர் உணவு கொண்டு வந்து கொடுக்கின்றனர்.

நகரவேலன்குடி ஸ்ரீ காமாட்சியம்மாள் சமேத ஸ்ரீகண்டேஸ்வர சுவாமிக்கு அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் 9-6-37 முதல் நடைபெற்றுவருகிறது. 18-6-37 வெள்ளிக்கிழமை மஹாபிஷேகம் நடைபெறும். அன்று இரவு திருவுலாக்காட்சி நடைபெறும்.

குப்பைத் தொட்டியில் என்ன இருக்கும் ? அமெரிக்காவிலுள்ள குப்பைத் தொட்டிகளிலிருந்து ஒரு கோடி பழைய 'ஹாட்'கள் சேகரிக்கப்படுகின்றன. அவை புதியனவாக்கப்பட்டு மறுபடியும் விற்கப்படுகின்றன.

# குளக்கரைப் பேச்சு

நேற்றுமாலை குளக்கரையில் வழக்கம்போல உபாத்தியாயர், சுப்புராயர், உள்ளூர்க்கணக்கப்பிள்ளை, முதலியார் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். அப்பொழுது சாஸ்திரியார் குடல் தெறிக்க ஓடிவந்தார்

### கிண்டி பந்தயக்குதிரை மாதிரி

"ஏன் சாஸ்திரியாரே! என்ன விசேஷம்! கிண்டி பந்தயக்குதிரை மாதிரி ஓடி வருகிறீரே!" என்று உபாத்தியாயர் கேட்டார்.

"ஐயையோ! உபாத்தியாயரே! அதையேன் கேட்கிறீர். வலதுகைக்கு ஆபத்து வந்துவிட்டது ஐயா! ஆபத்து வந்துவிட்டது!" என்றார் சாஸ்திரியார்.

"என்ன இது! சாஸ்திரியாரே யாருடைய வலதுகைக்கு ஆபத்து வந்துவிட்டது?" என்று பரபரப்புடன் எல்லாரும் கேட்டனர்.

### ஐயையோ! வலது கையே

"நம்முடைய மாகாணத்து 'அல்பாயசு மந்திரிசபை'யில் முதல் ஸ்தானம் வகிக்கிறார் பாருங்களேன்! அவரது வலதுகைக்கு ஆபத்து வந்துவிட்டது ஸ்வாமீ! ஐயையோ! பாவமே! வருகிற ஆபத்து வலதுகைக்குத்தானா வரவேண்டும்? அப்புறம் கையெழுத்து எப்படிப்போடுவது? சுளையாக மாதம் மூவாயிரம் ரூபாயை வாங்கி பாங்கில் போடுவது எப்படி? தினமும் நூறு ரூபாய் கூலிக்குக் கையெழுத்துப்போடுவது எப்படி? ஐயோ! கூலிக்குக் கையெழுத்துப்போடும் கூர்மாவே! தங்கள் வலது கைக்குத்தானா ஆபத்து வரவேண்டும். என்ன பரிதாபம் பார்த்தீரா! உபாத்தியாரே! அன்று ஒரு நாள் அமலா புரத்திலே விவசாயிகள் மத்தியில் கூர்மம் நின்றுகொண்டு சண்டமாருதமாகப் பிரசங்கம் செய்ததாம். 'இந்தச் சொற்பகாலத்தில் விவசாயிகளுக்கு நாங்கள் செய்திருக்கும் நன்மை கடலினும் பெரிது. காங்கரஸ் பதவி ஏற்று இதுபோன்ற நன்மை செய்தால் நான் எனது வலதுகையை அப்படியே துண்டித்துக்கொள்கிறேன்' என்று ஒருபெரிய சபதம் செய்தாராம். ஆஹா! அந்த நிலையில் விண்ணவர் மண்மாரி பொழியவில்லை. பீஷ்மாதிகளான அஷ்ட வஸுக்கள் பிரசன்னமாகவில்லை. ஆஹா! என்ன வீரம்! என்ன தைர்யம்! என்ன உறுதி! எப்படிப்பட்ட சபதம்!" என்று கூறி நாக்கை மடித்து 'லக்லக்' என்று சப்தம் செய்தார் சாஸ்திரியார்,

### வீரர் மரபிலுதித்த கூர்மா

சுப்புராயர் செய்கிறார்.—

"ஸார் கூர்மா வேங்கட ரெட்டி நாயுடுகாரு யார் தெரியுமா! வீரர் வம்சத்திலுதித்த வீராதிவீரர். இதை இரண்டு மாதம் முன்புதான் அவர் சொன்னார். அதை இப்பொழுது நிரூபித்து விட்டார். பாருங்கள்! 'நாக்கைப் பிடுங்கிக் கொள்கிறேன். மூக்கைத் திருகிச் கொள்கிறேன். காதை அறுத்துக் கொள்கிறேன். சிண்டைப் பிய்த்துக் கொள்கிறேன்' என்று சொன்னால் வீராவேசம் ததும்புகிறதா! 'வலதுகையை வெட்டிக் கொள்கிறேன்' என்று சொன்னீரே! அதுவன்றோ வீரம்! சபாஷ்! கூர்மா! தகும் தகும், நீவிர் வீரர் மரபிலுதித்தவர் என்று சொல்லிக்கொள்வதுதகும். ஆனால் தப்பித்தவறி இந்த அசட்டுக் காங்கரஸ்காரர் நாளைக்கு ஏதாவது நல்ல காரியம் செய்து விட்டால் தங்கள் கையை வெட்டிக் கொள்ள நேருமே! ஆனல், வெட்டிக் கொள்ளும் உத்தேசம் தான் தங்களுக்கில்லையே விளையாட்டுக்காகத் தானே இவ்விதம் சொன்னீர்கள்!"

### கூர்மாவின் 'குட்டு' வெளிப்பட்டது

முதலியார் சொல்கிறார்.—

"இன்னொரு வெட்கக் கேட்டைக் கேட்டீர்களா! தாம் பேசும் கூட்டங்களுக்கு எவ்வளவு தூரம் ஆட்களைக் கொண்டுவர முடியுமோ அவ்வளவும் செய்யுமாறு இரகசியக் கடிதம் எழுதினாராம். அந்த இரகசியம் அம்பலத்துக்கு வந்துவிட்டது. இப்பொழுது தெரிகிறதா! கூர்மா ரெட்டியார் கோதாவரி ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்ததன் இரகசியம்! அதுமட்டுமா! கூர்மா ரெட்டியார் ஒவ்வொரு காரியமாகத்தான் செய்து பார்க்கிறார். ஆனால் ஒவ்வொரு சமயமும் அந்த இரகசியம் வெளிப்பட்டுப் போகிறது. முதலில் தம் சகாக்களை விட்டுக் காங்கரஸில் பிளவு உண்டுபண்ண முயன்றார். இப்பொழுது அவர் என்ன சொல்லிப் பிரசாரம் செய்கிறார் தெரியுமா? பிராமணர் - பிராமணரல்லாதார் சண்டையைக் கிளப்பி விட்டுக்கொண்டு திரிகிறார். வெட்கம்! வெட்கம்!! தூ! தூ! நானா யிருந்தால் நாக்கைப் பிடுங்கிக் கொண்டு செத்திருப்பேன்"

### குட்டி தேவதைகள் குதிக்கின்றன

சுப்புராயர் சொல்கிறார்:—

"ஸிம்லா மலையுச்சியில் சில தேவதைகள் குதிக்கின்றனவாம். அந்தக் குட்டி தேவதைகள் இராஜப் பிரதிநிதியின் நிர்வாக சபையைச் சேர்ந்தவை. இராஜப் பிரதிநிதி மகாத்மா காந்தியை அழைத்துப்பேசினால் அவர்கள் தங்கள் பதவியை ராஜினமா செய்துவிடுவார்களாம். இச்செய்திக்கு ஆதாரம் ஏதுமில்லை.

'சாமி வரங்கொடுத்தாலும் பூசாரி வரங்கொடுக்கவில்லை' என்று சொல்வதுண்டு. ஜெட்லந்துக்கு மனம் இரங்கிப் பேசாமடந்தையான இராஜப் பிரதிநிதியைப் பேசச் சொன்னாலுங்கூட இந்த ஸிம்லா 'பூசாரிகள்' வரங்கொடுக்கமாட்டார்களாம்."

### ஆண் குழந்தை வேண்டுமோ? பெண் குழந்தை வேண்டுமோ?

"உபாத்தியாயரே! நான் கேட்பதற்குப் பதில் சொல்லுங்கள். உங்களுக்கு ஆண் குழந்தை வேண்டுமா? பெண் குழந்தை வேண்டுமா? வேண்டிய குழந்தையைப் பெறலாம். 'சட்' டென பதில் சொல்லும்" என்றார் சாஸ்திரியார்.

"அதென்ன! சாஸ்திரியாரே! சற்று விவரமாகச் சொல்லும்" என்று கேட்டார் முதலியார். அவருக்கு இவ்விஷயத்தில் சிறிது ஆர்வமிருப்பதாகக் காணப்பட்டது.

### ஸர் வி. ராமேசத்துக்கு............

"அதுவா! சொல்கிறேன்" என்று கூறி மேலும் சாஸ்திரியார் சொல்கிறார்:—

"புரொபஸர் ஏ. எம். லோ என்று ஒருவர் இருக்கிறார். அவர் பெரிய விஞ்ஞானி. வேண்டியபடி பிள்ளை பெற அவர் ஒரு மருந்துகண்டு பிடித்திருக்கிறார். அம்மருந்தைச் சாப்பிட்ட பலருக்குக் கைமேல் பலன் கிடைத்திருக்கிறது. குழந்தை வேண்டுமென்று வருபவரில்பெரும்பாலார் ஆண் குழந்தையையே விரும்புகின்றனராம்.

நால்வரில் ஒருவரே பெண் குழந்தையை வேண்டுகின்றனராம். இவ்விதம் சிறிது காலம் நடைபெற்றால் உலகில் பெண் ஜாதி குறைந்துபோகுமே! என்று டாக்டர்கள் அபாரமாகக் கலவரமடைந்திருக்கிறார்கள். அப்பொழுது பெண்களுக்குக் கிராக்கிஏற்படும். சிற்சில நாடுகளில் இருப்பதுபோல இருவருக்குஒரு பெண், மூவருக்கு ஒரு பெண் வீதம் இருக்க வேண்டியதுதான். ஆனல் அப்பொழுது ஸர் வேபா. ராமேசம் போன்றவர்கள் கர்ப்பத்தடைப் பிரசாரம்செய்ய முடியாதே யென்ற கவலைதான் என் மனத்தை வாட்டுகிறது."

"பேஷ்! பலே!" என்று ஆரவாரித்துக்கொண்டே எல்லாரும் எழுந்து சென்றனர்.

—கமலம்





# உதிர்ந்த மலர்கள்

### வெற்றியும் தோல்வியும்

வெற்றியினால் ஒரு மனிதன் முன்னேறுவதாக நினைப்பது தவறு. தோல்வியே முன்னேற்றத்தின் படி. அஃதே அவனைச் சீக்கிரத்தில் முன்னேற்றும்.

—சாமுவேல் ஸ்மைல்ஸ்.

* * *

### வேலையில்லாமை ஒழிய

நமது நாட்டில் இரண்டேகால் லட்சம் சதுரமைல் விஸ்தீரணமுள்ள நிலங்கள் பயிரிடப் படாமல் இருக்கின்றன. இவையாவும் பயிரிடப் படுமாயின் நமது நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் தலைகாட்டுமா? சென்ற ஐம்பது வருஷ காலமாக நமது நாட்டில் ரயில் வண்டிகள் ஓடுகின்றன. அவைகளுக்கு வேண்டிய பொருள்கள் வெளிநாட்டிலிருந்தே வருகின்றன. நம் நாட்டில் ஏன் அப்பொருள்களை உற்பத்தி செய்தல் கூடாது?

—வி. வி. கிரி.

* * *

### கோர்ட்டு இராட்சஸன்

இக்காலத்தில் ஜமீன்தாரர் முதல் ஏழைத் தொழிலாளி வரையில் எல்லாரும் தம் வழக்குகளைத் தீர்த்துக் கொள்ள கோர்ட்டுகளுக்கே போகின்றனர். பணக்காரர் ஏழைகளிடம்கொடுத்த கடனை வசூலிக்கக் கோர்ட்டை எதிர் பார்க்கிறார். ஏழைகளால் கோர்ட்டில் பேசப் போதிய அறிவில்லை. வக்கீல்களுக்குக் கொடுக்கப் பணமும் இல்லை. அதனால் ஏழைகள் பக்கம் தோல்வியே கிடைக்கிறது. கிராம மக்களின் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் ஏழைகளைக் கோர்ட்டுக்கு இழுக்கின்றன. ஐயோ! கோர்ட் இராட்சஸன் கொடுமை எவ்வளவு?

—சுவாமி சகஜானந்த சரஸ்வதி.

* * *

### காங்கரஸின் தொண்டன்

ஜின்னா என்னை வேறு விதமாக நினைத்து விட்டார். என்னுடைய செய்கைகளைக் கண்டு அவர் என்னைச் சர்வாதிகாரி என்று அழைக்கிறார். என்வரையிலுமே நான் சர்வாதிகாரம் செலுத்த முடியாது. நான் காங்கரஸ் ஸ்தாபனத்தின் தொண்டன். அதன் கட்டளைப்படி நான் நடக்கிறேன். வகுப்புவாதத்தைப் பற்றி என் சொந்த ஹோதாவில் நான் ஒன்றும் கூறமுடியாது. ஜின்னாவுக்கும் மற்றவர்களுக்கும் ஒன்று கூறுகிறேன், காங்கரஸ் ஒரு வகுப்பின் நன்மைக்காக உழைக்கவில்லை. இந்தியாவில் வகுப்புப் பிரிவுகளை ஒழித்து எல்லாரையும் ஒன்று சேர்க்கவே அது முயல்கிறது. இம்முயற்சியுடைய எல்லார்க்கும் அது துணைபுரியும்.

—பண்டித ஜவஹர்.

* * *

### வெளிநாடுகளும் இந்தியரும்

வெளி நாட்டிலுள்ள இந்தியரின் குறைகளுக்குக் காரணமென்ன? படிப்பின்மையும், ஒழுங்கின்மையும், குறைந்த செலவில் வாழ்க்கையை நடத்தலுமே. இப் பழக்கங்களுடைய இந்தியரை ஐரோப்பியர் அருவருக்கிறார். ஒழுக்கமும் படிப்பும் உள்ளவன் எல்லோராலும் மதிக்கப்படுகிறான். பண்டித ஜவஹரைப் பாருங்கள். அவர் காஷ்மீரத்தைச் சேர்ந்தவரா யிருந்தாலும் இந்தியாவேயன்றி வெளி நாடுகளிலும் அவர் புகழப்படுகிறார். பொதுவாகக் காஷ்மீரத்தைச் சேர்ந்தவர் பயமுடையவர்; தரித்திரம் பிடித்தவரைப் போன்று காண்பவர். காஷ்மீரமோ உலகத்தில் சிறந்த அழகான நாடு. அதனல் வெளிநாடுகளிலுள்ள இந்தியருக்கு வேண்டுவதென்ன? கூட்டுறவு; சகோதரத்துவம்; படிப்பு.

—ஆர். எஸ். ஒரா.

# உலகக் காட்சி

### இறகுகளுள்ள பல்லி

ஆஸ்திரேலியாவில் இறகுகளோடு கூடிய ஒருவகைப்பல்லி யிருக்கிறது. இதை யாராவது ஓடும்போது நிறுத்தினால் தனது இறகுகளை விரித்துக் கொண்டு இது வாயை 'ஆ'வெனத்திறக்கிறதாம். குடையைப் போன்ற இறகுகளும், குடைக்கம்பியைப் போன்ற எலும்புகளும், குடைத்துணியைப் போன்ற சதையும் இருக்கின்றன. இஃது ஓர் அதிசயமான ஜந்துவாகவே தோன்றுகிறது.

* * *

### உலகத்தில் பெரிய மலர்

சுமத்ரா தீவில் ஒரு வகைப்பூ உண்டாகிறது. இப்பூவைத்தரும் செடி பூமியிலிருந்து தானகவே ஆகாரத்தை எடுத்துக் கொள்வதில்லை. ஒருவகைக் கொடியின் வேரிலிருந்தே இச்செடிகள் முளைக்கின்றன. ஒரு பூவின் எடை 15 பவுன். (சுமார் நான்கு வீசை) இப்பூவின் மத்தியிலுள்ள காலியான பாகம் $1\frac{1}{2}$ காலன் தண்ணீரைக்கொள்ளும். இப்பூவுக்குக் காம்போ அல்லது இலைகளோ கிடையா. இப்பூவுக்கு வாசனை கிடையாது. அது ஒருவித துர்நாற்றத்தையே உண்டாக்குகிறது.

* * *

### வாயில் கண்ணாடி

வாயிலுள்ள இயற்கைப் பற்கள் விழுந்ததும் அவற்றிற்குப் பதிலாக வேறு செயற்கைப் பற்கள் கட்டப்படுகின்றன. டோராண்டோ நகரத்தில் ஈறுகளுள்ளவிடத்தில் கண்ணாடி உபயோகிக்கப்படுகிறது. இஃது உறுதியாக இருக்கிறதாம். அதோடு கண்ணாடிக்கு வர்ணமும் கொடுக்க முடியுமாதலால் அஃது ஈறைப் போலவே காணப்படுகிறதாம். சில சமயங்களில் இக்கண்ணாடி ஈறு உடைகிறது. அதுபோது வெகு சுலபமாக அது ரிபேர் செய்யப்படுகிறது. இதனல் இன்னும் சில வருஷங்களுள் எல்லார் வாயிலும் கண்ணாடி புகுந்து விடும்போல் இருக்கிறது.

* * *

### பைசிகில் சரித்திரம்

நூற்றுமுப்பது வருஷங்களுக்கு முன்னால் மரக்குதிரை ஒன்று இருந்தது. அதற்கு இரண்டு சக்கரங்கள் இருந்தன. பெடலும், இராங்கும் கிடையா. அதனல் மனிதன் ஏறி அதன் மீது உட்காரும்போது காலால் பூமியை உதைத்து விட்டே உட்காருவது வழக்கம், அவ்வுதையால் மரக்குதிரை சிறிதுதூரம் ஓடும். சிறிது வேகம் குறைந்தவுடனே மறுபடியும் உதைப்பான். இப்படியே உதைப்பதால் மனிதன் வெகு சீக்கிரத்தில் அலுத்துப் போய் விடுவான்.

நூறுவருஷங்களுக்கு முன்னால் 'பெடல்', 'கிராங்க்' முதலியவற்றோடு கூடிய சைகில் ஒன்று செய்யப்பட்டது.

* * *

### கண்ணாடி பூட்ஸ்

இதுவரையில் கண்ணாடியாலான பூட்ஸ்களைப்பற்றிக் கேட்டிருக்கிறீர்களா? இப்போது கண்ணாடி பூட்ஸ்கள் செய்யப்படுகின்றன. இவை சாதாரணமாக எப்போதும் போட்டுக் கொள்ளுவதற்கல்ல, சில சமயங்களில் கால்களில் சில நோய்களின் நிமித்தம் பாதங்களை வெட்ட நேருகிறது. இவ்வாறு வெட்டுதலைத் தவிர்க்கவே இப்புதிய கண்ணாடி பூட்ஸ்கள் செய்யப் படுகின்றன.

நோய் உண்டான பாதங்களில் இரத்த ஓட்டம் சரியாக ஓடுவது இல்லையாம். அதனல் அப்பாதங்களுக்கு இப்பூட்ஸ்கள் போடப்படுகின்றன. பூட்ஸுக்குள் காற்று குறைகிறது. அதனல் ஹிருதயத்தால் அனுப்பப்படும் இரத்தம் வெகு சீக்கிரமாகப் பரவுகிறதாம். பிறகு பாதங்களுக்குமேல் 'காங்கிரீன்' என்ற ஒரு சத்து படிகிறதாம். அதற்குப் பின்னர் பூட்ஸ்கள் எடுக்கப் படுகின்றன. நோய் நீங்கிவிடுகிறது.

* * *

### பிரயாணம் செய்யும் கோயில்

இக்காலத்தில் மக்கள் கோயிலுக்குப் போகக் கூசப்படுகிறார்கள். இது நமது நாட்டில் மட்டுமன்று. வெளி நாடுகளிலும் தான். அர்ஜன்டைனாவில் உள்ளவர் அனைவரும் கிறிஸ்தவர். அவர்களுக்கு வாரத்திற்கு ஒரு நாள் கூட கோயிலுக்குப் போகப் போதிய நேரம் இல்லையாம். இதை அவ்வரசாங்கப் பிரதம மந்திரி அறிந்தார். உடனே அவருக்கு முகம்மது நபி கூறிய ஒரு வாக்கியம் ஞாபகத்துக்கு வந்ததாம். 'நீங்கள் கோயிலுக்குச் செல்லாவிட்டால் கோயில் உங்களைத் தேடி வரும்' என்பதே அவ்வாக்கியம். அதனல் அவர் ஓர் அழகிய கோயிலைப் படகு ஒன்றில் கட்டினார். அக்கோயில் கண்ணாடியாலேயே கட்டப்பட்டிருக்கிறதாம். இப்படகுக் கோயில் வியாபாரிகள் உள்ள இடங்களுக்கெல்லாம் பிரயாணம் செய்கிறது. அவரவர் சுலபமாகக் கடவுளைத் தொழ முடிகிறதாம்.

* * *

### ஆகாய நாய்கள்

இக்காலத்து ஆகாயவிமானங்களால் பெருந்தீங்குகள் விளைகின்றன. யுத்தங்கள் ஆகாய விமானங்களின் உதவியாலேயே செய்யப்படுகின்றன. அபிஸினிய யுத்த ஆரம்பத்தில் உறங்கிக்கொண்டிருந்த அடோவா நகரத்தின் மீது இதாலிய ஆகாய விமானம் வெடிகுண்டுகளை வீழ்த்தி மக்களைக் கொன்றது. இவ்வித ஆபத்துக்களைத் தடுக்கத் தற்போது புதிய கருவி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்றது.

இக்கருவிக்கு 'பெடோஸ்' கோப் என்றுபெயர். இக்கருவியில் இரண்டு பூதக் கண்ணாடிகள் இருக்கின்றன. இஃது ஆகாயத்தில் திரிகின்ற பறவைகளையும் விமானங்களையும் கண்டுபிடித்து மின்சார கதிர்களின் வாயிலாக ஒரு மணியோசையை எழுப்புகிறது. ஊரெங்கும் கேட்கும் அம்மணியோசையால் உறங்கிக்கொண்டிருக்கும் மக்கள் விழித்துக் கொள்கிறார்கள்; விஷப்புகையினின்றும் தப்பவழிகளைத்தேடிக் கொள்கிறார்கள். அமெரிக்கர் இக்கருவியை 'ஆகாயத்தைக்காவல் புரியும் நாய்கள்' என்று அழைக்கிறார்கள்.

* * *

### கணக்குப்போடும் இயந்திரம்

இக்காலத்தில் மனித மூளைக்கு வேலையே யில்லை. எல்லாவற்றிற்கும் இயந்திரங்கள் வந்துவிட்டன. ஆபீஸில் கூட்டல் கழித்தல் தொல்லைகளெல்லாம் ஒழிந்துவிட்டன. இப்போது அமெரிக்காவிலுள்ள மசாச்சுசெட்ஸ் என்ற நகரில் புதிய கணக்குப் போடும் இயந்திரம ஒன்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அதன் எடை ஒரு டன் இருக்கிறதாம். அதில் பதின்மூன்றுயிரம் பாகங்கள் இருக்கின்றனவாம். அதன் அமைப்பைக் கொண்டு மனிதனின் மூளை எவ்வாறு இருக்குமென்பதைக் கூறிவிடலாமாம். இந்த இயந்திரம் கணக்கு நிபுணர்கள் பல நாட்கள் வரையில் போடக்கூடிய கணக்கைச் சில நிமிஷங்களில் போட்டுவிடுகிறதாம். அதில் எஃகாலான அறுநூறு அடி நீளமுள்ள தகடு ஒன்று இருக்கிறதாம். அந்தந்தக் கட்டைக் குறிப்பிட்ட இடங்களில் அழுத்துவதன் மூலம் நமது கணக்கை இயந்திரத்துக்குச் சொல்லிவிடலாம். சில நிமிஷங்களில் அக்கணக்கின் விடையை அந்த இயந்திரம் எழுதிக் காட்டுகிறது.

# மணித்திரள்

பிரிட்டிஷ் இந்தியாவில் ஒரு லட்சம் செவிடர் இருக்கிறார்.

* * *

இந்தியாவில் காச இருமல் நோயால் வாதைப்படுவோர் இருபதுலட்சம்பேர்.

* * *

அபிஸினிய யுத்தத்துக்காக 157 கோடி ரூபாயை இதாலி செலவழித்ததாம்.

* * *

சென்ற இருபத்தைந்து வருஷங்களுள் பதின்மூன்று மன்னர் முடிதுறந்தனராம்.

* * *

மனித உடலுக்குவேண்டிய உணவு வகைகள் எல்லாம் சரியான முறையில் பால் ஒன்றிலேயே இருக்கின்றனவாம்.

* * *

வங்காள மாகாணத்திலுள்ள பங்கூரா ஜில்லாவின் ஜனத்தொகையில் பத்தில் ஒரு பாகத்தவருக்குக் குஷ்டரோகம் இருக்கிறதாம்.

* * *

1931-ம் வருஷம் செப்டம்பர் மாதத்திலிருந்து இதுவரை இந்தியா முந்நூறு கோடி ரூபாய் பெறுமானமுள்ள தங்கத்தை ஏற்றுமதி செய்திருக்கிறது.

* * *

இந்தியாவில் வருஷந்தோறும் மலேரியா சுரத்தால் ஐந்து கோடி பேர் வருந்துகிறார். இன்னும் சில வருஷங்களில் பத்து கோடி பேர் வருந்துவர்.

* * *

உலகத்தில் சென்ற பத்து வருஷங்களில் அதற்குமுன் பத்து வருஷங்களைவிட மூன்று பங்கு அதிகமாக யுத்த ஆயுதங்களுக்காகச் செலவழிக்கப்பட்டிருக்கிறதாம்.

* * *

சிந்து மாகாணத்திலுள்ள அண்ட் பார்க்கா என்ற ஜில்லாவில் சென்ற நானூறுவருஷங்களாக ராஜபுத்திரர்க்கும் முகம்மதியர்க்கும் கலப்புமணம் நடந்து வருகிறதாம்.

* * *

மைசூர் சர்க்கரை ஆலையில் நாள்ஒன்றுக்கு 1400 டன் சர்க்கரை உற்பத்தி செய்யப்படுகிறது. உலகத்தில்உற்பத்தியாகும் சந்தன எண்ணெயில் முக்கால் பாகம் மைசூரில் உற்பத்தியாகிறது.

* * *

அமெரிக்காவில் 20,000 சினிமாக்களும் இங்கிலாந்தில்5,000-ம் இருக்கின்றன. இந்தியா அதிக ஜனத்தொகையுள்ள நாடாக இருந்தபோதிலும் அறுநூறு சினிமாக்களே இருக்கின்றன.

* * *

சினிமாவில் நடிக்கும் நடிகைகளில் சிலர் தற்போது ரப்பர் ரவிக்கைகளை உடுத்திக் கொள்கிறாராம். இந்த ரப்பர் கண்ணாடியைப் போன்று இருக்கிறது. அதனல் ரவிக்கை போட்டுக்கொண்டிருந்தாலும் உடல் முழுவதும் தெரியும்.

* * *

கீழ் எகிப்திலுள்ள ஜராஜிக்கருகில் இருகிழவிகள் ஒரு மண் குடிசையில் வசிக்கிறார்கள். அவர்களில் ஒருவர் தாய்; மற்றவர் பெண். தாயின் பெயர் ரபியா அஸ்ஸயீது; வயது 157. பெண்ணின் பெயர் முஷாரபா ஹாஷிம்; வயது 107.

* * *

மியூனிச் நகரில் குண்டினல் அடிபட்ட ஒரு போர்வீரர் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகையில் தபால் தலையில் பாதி அளவுள்ள ஒரு புஸ்தகத்தைத் தயாரித்தாராம். அப்புஸ்தகத்துள் 19,809 வார்த்தைகளும் 21 எண்களும் இருக்கின்றனவாம்.

* * *

சென்னைமாகாணத்தில் இருவருக்குக் கால் நடை உண்டு. கால் நடைகளின் எண்ணிக்கை இரண்டு கோடியே இருபது லட்சம். இவையல்லாமல் இரண்டு கோடி ஆடுகள் இருக்கின்றனவாம். கால்நடைகளையும் ஆடுகளையும் கூட்டினல் தலைக்கு ஒரு பிராணியைக் காணலாம்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளா வாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1937௵ ஜூன்௴ 18௳

## பிரிட்டனும் இந்தியாவும்

ஐரோப்பாவில் யுத்தம் வீறிட்டெழுந்தபோது, இந்தியாவுக்குப் பொறுப்பாட்சி வழங்கப்படும் என்று பிரிட்டனால் வாக்குறுதி செய்யப்பட்டது. அவ்வுறுதிப்படி மாண்டெகு - செம்ஸ்பர்ட் சீர்திருத்தம் வழங்கப்பட்டது. அது பொறுப்பாட்சிக்கு வழிகாட்டும் படி போன்றது என்றுஞ் சொல்லப்பட்டுவந்தது. அச்சீர்திருத்தத்தைத் தொடர்ந்து நல்கப்படும் சீர்திருத்தத்தால் பொறுப்பாட்சி உதயமாகும் என்று பிரிட்டிஷ் அரசியல் ஞானிகள் கூறிவந்தார்கள். இப்பொழுது மாண்டெகு - செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தைத் தொடர்ந்த சீர்திருத்தம் வந்துள்ளது. அதன்கண் பொறுப்பாட்சி உதயம் யாண்டுளதோ தெரியவில்லை.

தற்போது வழங்கப்பெற்றுள்ள சீர்திருத்தத்திலிருக்கிற கோணலை ஒட்டகத்தின் முதுகிலுங் காண்டல் அரிதாகும். எங்கும் கோணல்! எங்கும் கோணல்! புதுப் புது வியாக்கியானங்களுக்கு அச்சீர்திருத்தம் இடந் தந்து நிற்கிறது.

'மாண்டெகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தில் இரட்டையாட்சியிருந்தது. அவ்வாட்சி புதுச் சீர்திருத்தத்தில் காணோம்' என்று சொல்லப்படுகிறது. இரட்டையாட்சி சொல்லில் மட்டும் இல்லை; பொருளில் இருக்கிறது. சீர்திருத்தத்தின் அகத்தை நோக்குவோம்.

ஆட்சிப் பொறுப்பு மந்திரிமார் வசம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அதனுடன் கவர்னருக்கும் விசேஷ அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. கவர்னர் யார்? ஜனப்பிரதிநிதியா? கவர்னர் பார்லிமெண்டின் பொறுப்பைத் தாங்கியுள்ளவர். அப் பொறுப்புடைய ஒருவர் விசேஷ அதிகாரங்களை ஏந்தி மந்திரிமார்களை மேய்ப்பவராகிறார். மந்திரிமார் ஜனப்பிரதிநிதிகளாயிருந்தும், சமயம் நேரும்போது கவர்னரின் விசேஷ அதிகாரங்கட்கு இரையாக வேண்டியவரா யிருக்கிறார். கவர்னர் விரும்பினால் மந்திரிமாரை விலக்கலாம்; விலகச் சொல்லலாம். பொறுப்பு எவரிடத்திலிருக்கிறது? கவர்னரிடத்திலா? மந்திரிமாரிடத்திலா? கவர்னரோ பார்லிமெண்டுக்கு அடங்கியவர். முழுப்பொறுப்பு எங்கேயிருக்கிறது என்பதை நேயர்கள் சிந்திப்பார்களாக.

சமீபத்தில் பார்லிமெண்டில் இந்திய அரசியல் சீர்திருத்தத்தைப்பற்றிச் சில கேள்விகள் பிறந்தன. அவைகளுக்கு இந்தியா மந்திரி இறுத்த பதில்கள் கவனிக்கத்தக்கன. அவைகளில், இந்திய மந்திரிமார் வசம் ஆட்சிப் பொறுப்பு விடப்பட்டிருத்தலால், அவர்தம் நடைமுறைகளைப் பற்றிய கேள்விகள் பார்லிமெண்டில் கேட்டலாகாதென்றும், கவர்னர் பார்லிமெண்டிற்குப் பொறுப்பு வாய்ந்தவராதலால், அவரைப் பற்றிய விடயங்கள் பார்லிமெண்டில் பேசப்படலாமென்றும் இந்தியா மந்திரி சொல்லியுள்ளார். இதனால் ஆட்சி முறையில் இருவிதக் கிளைகள் இருத்தல் சிந்திக்கற்பாலது. ஒன்று கவர்னராட்சி; மற்றொன்று மந்திரிமாராட்சி. இருவிதங் கொண்ட ஆட்சி எங்ஙனம் பொறுப்பாட்சி யாகும்? பழைய இரட்டை யாட்சி வேறு உருவங் கொண்டு வந்து இந்தியாவில் கிடக்கிறது.

மந்திரிமாருக்கு முழுப்பொறுப்பில்லை. கவர்னர், மந்திரிமாரிடந் தலையிடும் உரிமை உடையவராகவே இருக்கிறார். அவர்க்குமேல் பார்லிமெண்டு இருக்கிறது. ஆகவே எல்லாம் பார்லிமெண்டுக்கே அடக்கம் என்பதில் என்ன ஐயம்? இன்னும் இந்தியாவின் பந்தம் அறுபடவில்லை.

பிரிட்டன் நூற்றெண்பது ஆண்டுகளாக இந்தியாவை ஆண்டும், இன்னும் இந்தியாவுக்குச் சுய ஆட்சி வழங்க அதற்கு மனமெழவில்லை. ஐரோப்பா யுத்தத்தின்போது வழங்கப்பட்ட உறுதிமொழி எங்கே பறந்ததோ தெரியவில்லை. யுத்தத்தின்போது இந்தியா எவ்வெவ் வழியிலோ உதவி செய்தது. இந்தியா தன் பிள்ளைகளை வாரி வாரிக் கொடுத்தது; தன் பொருளை வாரி வாரிக் கொடுத்தது; தனது வாழ்த்தை - நல்லெண்ணத்தை - வாரி வாரிக் கொடுத்தது. இந்தியாவின் உதவி வெற்றிக்கு உறுகருவியாக நின்றது என்று கூறல் மிகையாகாது.

இப்பொழுதும் ஒரு மகா யுத்தம் எதிர்பார்க்கப்படுகிறது. அந்த யுத்தத்துக்கும் இந்தியாவின் நட்பும் உதவியுந் தேவையா யிருக்கும். இந்தியாவின் நட்பும் உதவியுமின்றிப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் நிலவுதல் அரிதென்றுங் கூறலாம். முப்பத்தாறு கோடி மக்களையுடைய ஒரு தேசம்-நல்ல தேசம்-சாம்ராஜ்யத்தில் எங்கே யிருக்கிறது?

அத்தகைய தேசத்துக்குச் சுய ஆட்சி வழங்கப் பிரிட்டனுக்கு மனம் வரவில்லை. இந்தியச் சுய ஆட்சியால்பிரிட்டனுக்கு நலனே விளையும். பிரிட்டனுடன் நட்பு கொண்டே இந்தியா வாழும்.

நல்லெண்ண முடைய இந்தியாவுக்குப் பிரிட்டன் எப்பொழுதோ சுய ஆட்சி வழங்கியிருத்தல் வேண்டும்? சுய ஆட்சி வழங்க மனமில்லாதொழியினும், தற்போது வழங்கப் பெற்றுள்ள அரசியல் சீர்திருத்தத்தையொட்டிக் காங்கரஸ் கேட்கும் உறுதி மொழியை யாதல் அளிக்கப் பிரிட்டன் முன்வருகிறதா? இல்லையே. உறுதிமொழி படிப்படியே குறைக்கப்பட்டு வந்தது. காந்தியடிகள் கடைசியாக வெளியிட்ட கருத்துக்கும் இணங்க இந்தியா மந்திரி ஆலோசிக்கிறார். இன்னும் இந்தியாவைச் சந்தேகிப்பது பிரிட்டனுக்கு அழகன்று. காந்தியடிகள் வழி இந்தியா மந்திரி நடக்க ஒருப்பட்டால் இரு தேசங்களுக்கும் நலன் விளையும். வரப்போகும் உலக யுத்தத்துக்கும் பிரிட்டன் நடுக்குறவேண்டுவதில்லை.

காந்தியடிகள் கடைசியாக வெளியிட்ட கருத்தைப்பற்றியும், அதற்குத் திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் கூறிய விரிவுரையைப் பற்றியும் சிலதலைவர்களிடை மலைவுகள் ஏற்பட்டுள்ளன. காங்கரஸ் தலைவர் பண்டித ஜவஹர்லால்நேரு மலேயாவினின்று வந்ததும் தங் கருத்தை வெளியிடுவாரென்று எதிர்பார்க்கப்பட்டது. அவர் தமது கருத்தை ஒருவாறு கல்கத்தாவில் வெளியிட்டார். அதன்கண் காந்தியடிகள் கருத்தைப் பற்றி ஒருசொல்லுந் திகழவில்லை. லார்ட் ஜெட்லண்டு ஆக்ஸ்பர்டில் பேசியதற்கு மட்டும் பதில் பண்டிதரால் சொல்லப்பட்டது.

லார்ட் ஜெட்லண்ட், "'புதிய சீர்திருத்தம் தகர்க்கப்படல் வேண்டும்' என்றுபெய்ஸ்பூர்காங்கரஸில் நிறைவேற்றப்பெற்ற தீர்மானம் அப்படியே தானிருக்கிறது" என்று பேசினார். அத் தீர்மானம் மாற்றப்பட்டால் இணக்கத்துக்கு வழியுண்டாகுமென்பது லார்ட் ஜெட்லண்ட் கருத்துப்போலும்! காங்கரஸ் தலைவர் கல்கத்தாவில் பேசிய பேச்சில்,

> என்ன நிகழினும் நிகழ்க. காங்கரஸ் தீர்மானம் மாற்றமுறாது. அது சம்பந்தமாக லார்ட் ஜெட்லண்டுக்கு யான் எவ்விதத் துணையும் புரிதல் இயலாது

என்று வலியுறுத்தியுள்ளார். அதில் காந்தியடிகட்கும் ஒருவிதப் பதில் குறிப்பாகப் பொலிகிறது. இன்னும் மேல் விளைவைப் பார்ப்போம்.

காந்தியடிகள் வழி நின்று கடனாற்றுமாறு தலைவர்களுக்கு விண்ணப்பஞ் செய்து கொள்கிறோம். காங்கரஸுக்குள் பிளவு நேராதவாறு ஆண்டவன் காப்பானாக.

## "ஹிட்லர் வீழ்க"

ஹிட்லர் ஜெர்மெனிக்குப் புத்துயிரளித்து, அதைப் பாதுகாத்துவருவோர் என்பது உலகறிந்ததொன்று. ஹிட்லர் சர்வாதிகாரியாயிருத்தலால், அவர் ஜெர்மெனியின் நலத்தை நாடும் அளவில் நில்லாது, அடாத செயல்களிலுந் தலைப்பட்டுவிடுகிறார்.

அடாத செயல்களில் தலைப்படுவோர் என்றாதல் ஒருபோது வீழ்வர் என்பது உறுதி. அதிகாரத்திலுள்ளபோது செருக்கி மனம் போனவாறு நடப்போர் அறவோராகார். ஒருவரது குணம் அவர் அதிகாரத்திலுள்ளபோதே வெளிவரும்.

ஹிட்லர் தமது கருத்துக்கு மாறுபட்டவர்களைத் தொலைத்து விடுவதில் பேர்பெற்று வருகிறார். இச்செயல் அவர்தஞ் செல்வாக்கை நாளுக்கு நாள் குறைத்துவிடும் என்பதில் ஐயமில்லை. ஹிட்லர் செயலை 1934-ம் ஆண்டில் ஆதரித்து ஒரு நூல் எழுதிய சங்கை சார்லஸ் மெக்பர்லண்ட் இப்பொழுது ஹிட்லருக்கு ஒரு திறந்த மடல் தீட்டியுள்ளார். அதன் சாரம் வருமாறு:—

> ஹிட்லரே, தாங்கள் எனக்கு எவ்வளவோ வாக்குறுதி யளித்தீர்கள். அவைகளை யெல்லாம் மீறி நடக்கத் துணிந்து விட்டீர்கள். வாய்மை, நேர்மை, ஜீவகாருண்யம் முதலியன மன்பதையின் வாழ்க்கைக் குரிய பொது அறங்கள். அவைகளையுங் கடந்து தாங்கள் கடனாற்றுகிறீர்கள். நாகரிக உலகம் தங்களை எள்ளுகிறது. அவ்வுலகில் தங்கள் மதிப்புக் குன்றியே வருகிறது. தங்கள் செயலால் ஜெர்மெனி நலம் பெறாது. பலாத்காரமும் துவேஷமும் எப்பொழுதும் நலஞ்செய்யா.

பெல்கிரேடில் பல்லாயிரம் மாணக்கர்கள் ஒருங்கு சேர்ந்து, "ஹிட்லர் வீழ்க; அவரது 'நாஸிஸம்' வீழ்க. பிரான்ஸ் வாழ்க; அதன் ஜனநாயகம் வாழ்க" என்று கோஷஞ் செய்து ஊர்வலம் வந்தார்களாம். ஹிட்லருக்கு மாறாக வேறு பல நிகழ்ச்சிகளும் நடந்து வருகின்றன.

காரணமின்றி அதிகாரத்திலுள்ளபோது தமக்கு ஆகாதவர்களைத் துன்பப் படுத்தல் பாவம். அவர்தம் தீச்செயல் அவரையே சுடும். தீச்செயல் எவரையும் வாளாவிடுவதில்லை. அச்செயல் அவரைத் தாக்கியே தீரும்.

இன்னுஞ் சின்னாளில் "ஹிட்லர் வாழ்க" என்று முழங்குவோரும், "ஹிட்லர் வீழ்க" என்று கூக்குரலிடுங் காலம் வரும். அடாது செய்வோர் படாது படுவது திண்ணம்.

## இடியேறு

### கேள்வியில்லையா?

இதாலியும் ஜெர்மெனியும் ஒன்றுபட்டு ஸ்பெயினில் புரிந்து வரும் அட்டூழியங்கள் நாளுக்கு நாள் வரம்பு கடந்தே போகின்றன. அட்டூழியங்களைக் குறித்து, பாஸ்க்யு குடியரசுத்தலைவர், பிரிட்டன், பிரான்ஸ், ருஷ்யா, அமெரிக்கா உள்ளிட்ட இருபது நாடுகளுக்கு அறிக்கை விடுத்துள்ளார். அவ்வறிக்கையிலுள்ள சாரம் வருமாறு:—

> இதாலிய - ஜெர்மென் 'பாஸிஸ்டு'களும், மூர்களும் ஸ்பெயின்மீது படையெடுத்து மனித வேட்டையாடுகிறார்கள். நீண்ட காலமாக நிலவிவரும் ஜனநாயகத்தை அழித்துவிட வேண்டுமென்பது அவர்கள் நோக்கம். ஜனநாயக நாடுகள் என்ன செய்யப் போகின்றன? சென்ற எழுபத்தைந்து நாட்களாக இதாலிய-ஜெர்மென் படைகளும் விமானங்களும், கூலி மொராக்கர்களின் துணைகொண்டு பாஸ்க்யு பட்டணங்களையும், அவற்றைச்சூழ்ந்துள்ள கிராமங்களையும் அழித்து வருகின்றன. மக்கள் கொல்லப்படுகிறார்கள். பிணங்கள் மலைபோல் குவிகின்றன. கேட்பாரில்லை. சில வல்லரசுகள் அதையும் இதையுஞ் சொல்லிக் காலங் கழிக்கின்றன. அவை அட்டூழியங்களுக்குத் துணை செய்வனவாகின்றன.

இவ்வறிக்கையை ஜனநாயக தேசங்கள் கவனிக்குமா? உலகில் ஜனநாயகம் வேண்டுமா? வேண்டாமா? ஜனநாயக தேசங்கள்



ஏன் வாளா கிடக்கின்றன? பிரிட்டனும் - பிரான்ஸும் என்னென்னவோ சொல்லிக் காலங் கழிப்பதன் உள்ளக் கிடக்கை என்னை? இதாலிக்கும் ஜெர்மெனிக்கும் அச்சமா? நாளேற நாளேற மத்திய ஐரோப்பா முழுவதும் ஒன்றுபட்டால் என் செய்வது? இதாலி - ஜெர்மெனி பலங் குறையட்டுமென்னும் எண்ணங்கொண்டு வல்லரசுகள் சும்மா இருக்கின்றனவோ? ஸ்பெயின், இதாலி - ஜெர்மெனி வயப்பட்ட பின்னர், பிரிட்டனும் - பிரான்ஸும் எழுவதால் பயன் விளைதல் அரிது. பாஸ்க்யு தலைவரது அறிக்கை கண்டாதல் உலகிலுள்ள ஜனநாயக அரசுகளெல்லாம் ஒன்றுபட்டு, முஸோலினி - ஹிட்லர் கொட்டத்தை அடக்க முன் வருமா?

### பெண்மக்கள் சத்தியாக்கிரகம்

கல்கத்தாவுக்கு அணித்தேயுள்ள சங்கிரை பெல்பெடோர் சணல் ஆலையிலே 300 பெண்மக்கள் வேலை நிறுத்தஞ் செய்துள்ளார்கள். காரணம் விநோதமாயிருக்கிறது. பெண்மக்கள் குழந்தைகளுக்குப் பால்கொடுக்க அநுமதிபெற்று வெளிச் செல்வது வழக்கமாம். அவ் வநுமதிக்கு லஞ்சம் கொடுக்கவேண்டுமென்று பெண்மக்கள் வலியுறுத்தப்பெற்றார்களாம். இதை முன்னிட்டுப் பெண்மக்கள் ஆலைக்குள் சத்தியாக்கிரகஞ் செய்துள்ளார்கள். இத்தகை வேலைநிறுத்தம் போற்றற் குரியதே. பெண்மக்களின் சத்தியாக்கிரகத்தை வளரவிடுவது அறமன்று. உடனே அதிகாரிகள் தலையிட்டு, லஞ்சம் வாங்குவதை யொழித்துப் பெண்மக்களுக்கு நியாயஞ் செய்வார்களாக. ஏழை இந்தியப் பெண்கள் ஆலைகளிலும் மற்றத் தொழிற்சாலைகளிலும் படும் பாட்டை ஆண்டவனே அறிவன்! அவர்கள் கஷ்டம் என்று ஒழியும்? காங்கரஸ்காரர் மந்திரிகளாக வந்ததும் பெண் தொழிலாளர்க்கென்று சில தனிச் சட்டங்கள் நிறுவ முற்படுவார்களென்று நம்புகிறோம்.

### மரண தண்டனை

மரண தண்டனை என்றதும் எங்கே என்று மக்கள் கேட்க வேண்டுவதில்லை. 'ருஷ்யாவில்' என்று எவரும் விளங்கிக் கொள்வர். ருஷ்யாவில் நடைபெறுவது "பாஸிஸ" ஆட்சியன்று. அங்கே பொதுஉடைமை ஆட்சி நடைபெறுகிறது. அவ்வாட்சியில் மரண தண்டனை அடிக்கடி விதிக்கப்படுகிறது. தேசத்துரோகச் செயலே காரணம் என்று சொல்லப்படுகிறது. பொதுஉடைமை ஆட்சியில் தேசத் துரோகத்துக்கு இடம் உண்டாகுமோ? முன்னே பல முறை மரண தண்டனைகள் விதிக்கப்பட்டன. இப்பொழுது சமீபத்தில் எட்டு இராணுவ வீரர்கட்கு மரணதண்டனை விதிக்கப்பெற்றது. அவ்வெண்மரும் முதலாளி கட்சிக்கு ஆக்கந்தேட முயன்றனர் என்று அரசாங்கத்தார் சொல்கிறார். அத்தகைய இராணுவ வீரர் ருஷ்யாவில் எங்ஙனமிருத்தல் கூடும்? டிராட்ஸ்கி கட்சியார்மீது பலவித பழிகள் சுமத்தப்படுகின்றன. அப் பழி காரணமாக நிரபராதிகள் கொல்லப்படுகிறார்கள். சென்ற சனிக்கிழமை மரண தண்டனை விதிக்கப்பெற்ற எண்மரும் டிராட்ஸ்கியை ஆதரிப்பவராகவே யிருப்பர். ஸ்டாலின் ஆட்சியிலும் சர்வாதிகாரமே நிலவி யிருக்கிறது. உண்மை நாளடைவில் வெளியாகும். எண்மர் மரண தண்டனையைப்பற்றி அரசாங்கத்தார் அறிக்கை யொன்று வெளியிட்டனர். அவ் வறிக்கையால் தண்டனை நிறைவேற்றம்மட்டுந் தெரிகிறது. தண்டனை நிறைவேறிய இடம், முறை முதலியன தெரிந்துகொள்ளல் இயலவில்லை. பிணங்கள் உறவினரிடஞ் சேர்க்கப்பட வில்லையாம். அவைகள் எரிக்கப்பட்டனவாம். கருத்து வேற்றுமைக்கு இடந்தரும் 'நல்லாட்சி' உலகில் யாண்டுங் காணோம்.

# மலையாள மந்திரி மத்தளம் கொட்டுகிறார்!

## 'மலை விழுங்கி மகாதேவன்'

## ஜெட்லந்துக்கு ராஷ்டிரபதி பதில்

### 'கூர்மா கம்பெனி' கோவிந்தா!

### உடனே சட்ட சபைகளைக் கூட்டுக

### 'கார்டியன்' சொல்கிறது

கூர்மா ரெட்டியாரின் பிரயாணம் முடிந்தது. மேற்குக் கடற்கரையில் மலையாள மந்திரி கிளம்பிவிட்டார். புது அரசியலை உடைக்கவே காங்கரஸ்காரர் சட்டசபைக்குச் செல்கின்றனர் என்ற தீர்மானத்தைக் காங்கரஸ் திரும்பப் பெற்றுக் கொள்ளவில்லையென்று ஜெட்லந்து மூக்கால் அழுகிறார். அந்தக் காரியம் முடியவே முடியாதென்று ராஷ்டிரபதி கர்ஜிக்கிறார். சட்டசபைகளைக் கூட்டுமாறு 'மாஞ்செஸ்டர் கார்டியன்' சொல்கிறது. இந்திய நெருக்கடிபற்றிக் காமன்ஸில் கிளர்ச்சி செய்யவேண்டா மென்று ஸ்டான்லி சொல்கிறார்.

(இராஜீய நிருபர்)

சென்னை 'அல்பாயசு மந்திரிசபை'யின் சிருஷ்டி கர்த்தாவான கூர்மா வேங்கட ரெட்டி நாயுடுகாரு ஆந்திர தேசத்தில் சென்று காங்கரஸ்மீது வசை புராணம் பாடிவிட்டு வந்தார். கூர்மாவுக்குச் சொந்தமான ஆந்திர நாட்டில் அவர் சுற்றுப்பிரயாணம் செய்தார். அவருக்குத் தாளம் போடுவதற்காக நமது நாட்டுக் கோட்டைச் செட்டியாரும் போனார். அவர்தான் குமாரராஜா முத்தைய செட்டியார்.

#### மலையாள மத்தளம்

அடுத்தபடியாக இன்னொருவர் மத்தளம் முழக்கக் கிளம்பினார். அவர் ஒரு மலையாளி; இளைஞர்; எம். ஏ; எம். எல். ஏ; கல்வி, சுகாதார மந்திரியா யிருப்பவர். அவர் தம் தாய் நாட்டை நோக்கிப் புறப்பட்டார். அவருக்குக் கட்டியங் கூறவும், விருது பிடிக்கவும் சிலர் ஏற்பட்டனர். கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் அந்த இளைய நாயரும் ஒரு பிரசங்கம் செய்தார். 'பாலட் - ஷெட்டி கடிதப் போக்கு வரவு' என்று சில காலம் முன்பு பத்திரிகைகளில் பிரசுரமாயிற்றே அதைப் பற்றிப் பேசினார் பாலட். 'காங்கரஸ்காரர் பிற கட்சியினரைத் தம் கட்சிக்குச் சேர்ப்பது போல நானும் என் கட்சிக்கு ஆள் சேர்த்தேன்' என்று சொன்னார் அவர். காங்கரஸ்காரர் பாலட்டைப்போல இரகசியத்தில் கயிறு திரிக்கவில்லையே!

பிறகு அவர் தம் முதன் மந்திரி காட்டிய வழியைப் பின் பற்றிக்கொண்டு காங்கரஸ்மீது வசை புராணத்தை அவிழ்த்தார். கூர்மா ரெட்டியார் பிராமணர் - பிராமணரல்லாதார் சண்டையைக் கிளப்பிப் பேசினார். இந்த மலையாள பகவதி என்ன செய்தார் தெரியுமா? ஹிந்து-முஸ்லிம் பிணக்கைக் கிளப்பினர். மலையாளம் ஜில்லாபோர்டு உபதலைவர் தேர்தலில் அங்கத்தவர்கள் ஒரு ஹிந்துவுக்கே 'ஓட்' அளித்தார்களாம்.

'காங்கரஸ்தான் புது அரசியலை ஒழிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறதே. அப்புறம் உறுதிமொழி எதற்கு? சட்டசபையை எப்பொழுது கூட்டினால் இவர்களுக்கென்ன?' என்று கேட்கிறார் அவர். அவருக்கு ஒரு விஷயம் சொல்கிறேன்.

அந்தோ! நாயரே! இதுகூடவா தங்களுக்குத் தெரியவில்லை. என்றைக்கோ ஒரு நாள் சாகத்தான் போகிறோமே என்று யாராவது பட்டினி கிடப்பதுண்டா? ஒரு புதிய வீடுகட்டினால் அது என்றைக்காவது இடிந்து விழப்போவது தானே யென்று தூண் வையாமலிருக்க முடியுமா? ஆமாம்! புது அரசியல் கோட்டைக்குள் புகுந்த பிறகல்லவோ அதைத் தகர்க்கவேண்டும்! அதற்குத்தான் உறுதி மொழி கேட்கப்படுகிறது.

#### கடன் வாங்கவில்லை

'அல்பாயசு மந்திரிசபை' காங்கரஸின் நிர்மாணத்திட்டத்தைக் கடன் வாங்கிக் காப்பியடித்தது என்றுசொல்வது தப்பு' என்கிறார் நமது மலையாள மந்திரியார்.

ஆமாம்! மந்திரியாரே! காங்கரஸின் நிர்மாணத் திட்டத்தை 'அல்பாயசு மந்திரி சபை' கடன் வாங்கிக்கொண்டது என்று எப்படிச் சொல்லலாம்! அது சுத்த தப்பு! தாங்கள் சொல்வது சரி! நான் ஒப்புக்கொள்கிறேன். காங்கரஸின் நிர்மாணத் திட்டத்தை 'அல்பாயசு மந்திரி சபை' திருடிக்கொண்டது என்று சொன்னால் சரிதானே!

போகட்டும். இவ்விஷயத்தை இவ்வளவில் நிறுத்திக்கொண்டு தற்போது ஏற்பட்டுள்ள அரசியல் முட்டுக்கட்டை பற்றிச் சற்றுப் பேசுவோம்.

#### பொறுப்பாட்சி எப்படி?

இந்த அரசியல் நெருக்கடியிருக்கிறதே! இது முதல் தரமானது. ஒரு பெரிய நெருக்கடியென்று உலகமே கவலைப்படுகிறது. உலகம் கவலைப்பட்டாலும் சரி, கவலைப்படாத பேர்வழிகள் இருவர், லார்டு ஜெட்லந்தும், லார்டு லின்லிதோவுமே அவ்விரு ஆசாமிகள்.

இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் நெருக்கடி பற்றிப் பார்லிமெண்டில் யாராவது ஒருவர் இந்தியா மந்திரியைக்கேட்பர். உடனே அவர் ஏதாவது சொல்வார். அதைப் பத்திரிகைக்காரர்கள் இந்தியாவுக்கு அனுப்புவார்கள். இந்தியப்பத்திரிகை நிருபர்கள் அதுபற்றி மகாத்மாவைப் பேட்டி காண்பார்கள். மகாத்மாவின் அபிப்பிராயம் இந்தியப் பத்திரிகைகளிலும் லண்டன் பத்திரிகைகளிலும் வெளியாகும். உடனே அதுபற்றி மறுபடியும் பார்லிமெண்டில் விவாதம் நடைபெறும். ஒரு பெரிய நெருக்கடி எந்த விதமாகப் பேசப்படுகிறது பார்த்தீர்களா! நமக்குப் புது அரசியல் மூலம் அளிக்கப்பட்டிருக்கும் பொறுப்பாட்சி இதுதான்! பொறுப்புள்ள யாரும் கலந்து பேசமாட்டார். பத்திரிகை மூலமாகவே பேசிக் கொள்வர். எப்படி யிருக்கிறது விஷயம்!

இந்த விதமாக ஒரு நாள் பார்லிமெண்டில் கேள்வி கேட்கப்பட்டது. மந்திரிமார்களுக்கும் கவர்னர்களுக்கும் அபிப்பிராய பேதம் வரும்பொழுது அவர்களை ராஜிநாமா செய்யுமாறு கவர்னர் வற்புறுத்த வேண்டுமென்ற உறுதிமொழியை முன்னதாக அளிப்பானேன்? சமயம் வரும்பொழுது எது சிறந்த வழியோ அதை அவர்கள் அனுஷ்டித்துக் கொள்ளட்டும் என்று ஜெட்லந்து கூறினர், 'ஏது இவர் சொல்வதைப் பார்த்தால் உச்சாணிக் கொம்பிலிருந்து கீழே இறங்க மாட்டார்போ லிருக்கிறது. இது சமாதானத்துக்கு வரும் வழியாகத் தோன்றவில்லை. மயிலே மயிலே என்றால் இறகு போடுமா?' என்று யாரோ பேசிக் கொண்டனர்போ லிருக்கிறது. அவ்விஷயத்தை இந்தப் பாழுங்காற்று ஜெட்லந்து காதில் போட்டு விட்டது. அவர் உடனே ஓடினார் ஆக்ஸ்பர்டு பிற்போக்காளர் சங்கத்துக்கு.

#### சிரியாமல் வேறு என்ன செய்வது?

"'புது அரசியலை உடைப்பதற்கே காங்கரஸ் சட்டசபைக்குச் செல்கிறது' என்று பெய்ஸ்பூர் காங்கரஸ் தீர்மானித்திருக்கிறது. அத்தீர்மானம் திரும்பப் பெற்றுக்கொள்ளப் படவில்லை. அவ்விதமிருந்தும் பிரிட்டிஷ் அரசாங்கம் மந்திரி பதவி ஏற்றுக்கொள்ளுமாறு காங்கரஸ்காரரை அழைத்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் இந்தியாவுடன் நேசப்பான்மையில் நடந்துகொள்ள விரும்புகிறதற்கு இதுவே போதிய அத்தாட்சி" என்று அவர் கூறினர்.

மிக நன்று. புது அரசியலை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளும் கட்சி ஏதாவது இந்தியாவில் இருக்கிறதா? இருப்பதாக இந்தியா மந்திரிக்குத் தெரியுமா? வெளிநாட்டார் சமத்தும் ஓர் அரசியலை உடைப்பதாக ஒரு தேசிய மகாசபை தீர்மானித்தது. தேர்தலில் அம் மகாசபைக்கே பெரும்பான்மை ஸ்தானம் கிடைத்தது. பெரும்பான்மை ஸ்தானம் கிடைத்த கட்சியைக் கூப்பிட்டே மந்திரிசபை அமைக்கவேண்டுமென்று சட்டம் சொல்கிறது. ஆகவே அரசாங்கம் காங்கரஸை மந்திரி பதவி ஏற்குமாறு அழைத்தது. அதே காங்கரஸ் பெரும்பான்மை ஸ்தானம் பெறாத இடங்களில் அரசாங்கம் காங்கரஸாரை அழைத்ததா? இந்த விஷயத்தை ஒரு பெரிய அத்தாட்சியாக ஜெட்லந்து கூறுவதைக் கண்டு சிரியாமல் வேறு என்ன செய்வது?

#### சட்டசபைகளைக் கூட்டுக

'டெய்லி டெலிகிராப்' என்ற பத்திரிகை ஒரு யோசனை சொல்கிறது. மறுபடியும் கவர்னர்கள் அந்தந்த மாகாணச் சட்டசபைக் காங்கரஸ் கட்சித் தலைவர்களை அழைத்துப் பதவி ஏற்குமாறு சொல்லவேண்டும். காங்கரஸ்காரர் மறுத்தால் இந்திய அரசியல் சட்டம் 93-வது பிரிவின்படி கவர்னர்கள் ஆட்சி செலுத்தவேண்டும் என்று அப்பத்திரிகை கூறுகிறது.

(12-ம் பக்கம் பார்க்க)

## நமது கிராமங்களும் மாணுக்கர் கடமையும்

மகாத்மா காந்தி பின் வருமாறு கூறுகிறர் :—

இக்காலத்தில் படித்தவர்களாலேயே கிராமங்கள் பாழ்படுத்தப்பட்டன. படித்தோர் நகர வாழ்க்கையில் ஈடுபடுகின்றனர். அதனுல் கிராமத்தின் ஜனத்தொகை குறைகிறது. இப்போது நாம் செய்ய வேண்டுவதென்ன ? படித்தவர்களுள் பொதுஜனப் பணியில் ஈடுபட மனமுடையவர் கிராமங்களில் வாழ்தல் வேண்டும். கிராம மக்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்தல் வேண்டும்.

கிராமங்களில் வாழ முற்பட்டோர் அங்குள்ள கஷ்டங்களையும் அனுபவிக்க நேரும். பேசிக் காலத்தைப் போக்க உரிய துணைவர் கிடைக்கமாட்டார். அதுபற்றி வருந்துதல் கூடாது. இதற்கெல்லாம் துணிந்தவரே நகரங்களிலிருந்து கிராமங்களுக்குச் செல்லுதல் வேண்டும்.

இவ்வித வாழ்க்கையை மேற்கொள்பவரே தேச நலனுக்கு உழைப்பவராவர். பணஆசை பிடித்தவருக்குக் கிராமம் வெறுப்புக்குரிய விடமாகவே தோன்றும். எளிய மக்களுக்கு உதவி புரிவதன் மூலம் கிராம வாழ்க்கை சந்தோஷமாகத் தோன்றும். இளைஞர்கள் கிராமங்களில் பழகிவிட்டால் அக்கிராமங்களை விட்டு வரமாட்டார்கள். நகர மக்களைவிட நாட்டுப்புற மக்கள் வேறல்ல. நகரத்தில் காணப்படாத அன்பையும், ஈகைக் குணத்தையும் நாட்டுப்புறங்களில் காணலாம். நாட்டுப் புறங்களின் சிறப்பை உணர்ந்தாலேயே, தேச பக்தர்கள் தேச விடுதலைக்கு உழைப்பவர் நாட்டுப் புறமக்களேயென்று உணர்வார்கள்.

### "காதல் உலகம்"

திரு. கதிரேசனின் ரேடியோ பிரசங்கம்

(கொழும்பு நிருபர்)

இலங்கைத் தனவணிக இளைஞர் சங்கத்தலைவரும், சமூக சீர்திருத்தவாதியும், சிறந்த எழுத்தாளருமாகிய திருவாளர் ஆர். எம். எஸ். எம். கதிரேசன் அவர்கள் (19-6-37) சனிக்கிழமை இரவு 7-30மணிக்குக் கொழும்பு ஒலிபரப்பும் (ரேடியோ) நிலையத்திலிருந்து "காதல் உலகம்" என்னும் பொருள் குறித்த அரைமணி நேரம் வரை ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவார்களென "சிலோன்ரேடியோ டைம்ஸில்" குறிப்பிடப்பட்டிருக்கிறது.

திரு. கதிரேசனுர் ஆற்றும் சொற்பொழிவில் தற்காலத்தமிழர் மணமுறையின் தன்மையினையும், காதல் தொடர்பின் கருத்தினையும், மக்கள் வாழ்க்கையில் இன்பங்காணும் வழியினையும், தக்க சான்றுகளுடன் எடுத்துரைப்பார்களெனத் தெரிகிறது.

மேற்படி பிரசங்கம் இந்தியாவிலுள்ள பல பாகங்களிலும், (வி. யு. பி. 428,5 மீட்டரில்) கேட்கப்படலாம்.

### ஐரோப்பியரைவிட இந்தியர் அறிவாளிகளே

பெல்ஜியர் கருத்து

ஆல்பர்ட் ஹூப்ளோ என்ற பெல்ஜியர் இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்கிறர். அவர் ஒரு பத்திரிகைநிருபரிடம் கூறியது வருமாறு:—

"ஐரோப்பிய தேசங்களில் இருப்பவர்களைவிட இந்தியர்கள் சுத்தமாகவேயிருக்கிறர்கள். இந்தியாவின் கிராமங்களிலுள்ள விவசாயிகள் மேற்குநாட்டு விவசாயிகளைவிட ஏழையாயிருந்தாலும் மிகுந்த அறிவாளிகளாகவும், பெருந்தன்மை யுள்ளவர்களாகவும், கௌரவமுள்ளவர்களாகவு மிருக்கிறர்கள். இந்தியாவில்நடைபெறும் தேசியப்புனருத்தாரணத்தைக் கண்டு மகிழ்கிறேன். தேசத்தில் ஒருவிதவிழிப்புத் தோன்றியுளது. இந்தியர்கள்கொண்டுள்ள சுதந்திர தாகத்தைக் கண்டு பிரமித்துவிட்டேன்."

## ஜப்பான் முன்னெச்சரிக்கை

## இதாலியின் அபிஸினிய தானம்

### போலிப் பாதுகாப்புக் கண்டனம்

—[o]—

### சீனத்தில் ஜப்பானுக்கு எதிர்ப்பு

### ஆங்கிலப் பாதிரியார் இராஜிநாமா

#### ஸ்பெயின் யுத்தம்

வேலன்ஸியா பிரதேசத்தில் கலகப் படைகளுக்கும் அரசாங்கப் படைகளுக்கும் பெருத்த யுத்தம் நடந்ததாகத் தெரிகிறது. அந்த யுத்தத்தில் கலகக்காரருடைய ஆயுதங்கள் சிலவற்றை அரசாங்கம் கைப்பற்றிய போதிலும் அரசாங்கத் தரப்பில் ஐந்நூறு பேர் காயமடைந்தனராம். பாஸ்குவி மக்களைக் கலகக்காரர் பயமுறுத்துகிறர். அம்மக்கள் கலகக்காரருக்குத் தாழாவிடின் அப்பிரதேசம் கொர்னிகா நகரத்தைப் போன்று முந்நூறு விமானங்களைக் கொண்டு நாசமாக்கப்படும் என்று கூறப்படுகிறது.

பில்பயோ பிரதேசத்தில் யுத்தம் பலமாக நடந்து வருகிறது. அரசாங்கத் தரப்பில் பல நஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றனவாம்.

பிரான்ஸில் இதாலியின் 'பாஸிஸ'த்துக்கு விரோதமான இருவர் இருந்தனராம். இவர்கள் இருவரும் கொல்லப்பட்டனர். இவர்களைக் கொன்ற குற்றத்தால் ஒருவர் கைது செய்யப் பட்டார். பின்னர் அவர் விடுவிக்கப் பட்டார். இக்கொலைகள் அரசியல் சம்பந்தப் பட்டவை என்று கூறப்படுகின்றன.

பில்பயோ பிரதேசம் கலகக்காரர் வசம் வீழ்ந்துவிடும்போல் தெரிகிறது. பாஸ்குவிப் பிரதேசத்தின் தலைவரான அக்குவிரி என்பவர் ஓர்அறிக்கை வெளியிட்டிருக்கிறர். குடியாட்சி நாடுகள் என்று சொல்லிக்கொள்ளும் பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளையெல்லாம் அவர் வைகிறர். இதாலி ஜெர்மன்படைகளும், வீரர்களும் ஸ்பெயினைத் தாக்கும்போது இந்நாடுகள் பாதுகாப்பு பாதுகாப்பு என்று சொல்லிக்கொண்டு வேடிக்கை பார்க்கின்றன. இப்போக்கையே தலைவர் கண்டிக்கிறர்.

ஸ்பெயினில் கலகக்காரர் அந்நியர்களையும், அரசாங்கத்தரப்பில் உள்ளவர்களையும் பணம் கொடுத்தாவது விலைக்கு வாங்கிவிட உறுதிகொண்டுவிட்டாராம். பிரான்ஸைச் சேர்ந்த ஆகாயவிமானிக்கு மூவாயிரம் பவுன் கொடுப்பதாகக் கூறினராம். அவர் அதற்குச் சம்மதிக்கவில்லை. அதனுல் அவரது விமானம் வீழ்த்தப்பட்டது. இன்னும் கலகக்காரர் அக்கிரமங்கள் எவ்வளவு தூரம் பரவுமோ தெரியவில்லை.

பாஸ்குவி அரசாங்கம் பில்பயோ நகரைவிட்டு மாற்றப்படாதென உறுதியாகக்கூறப்படுகிறது. வெளிநாடுகளிலுள்ள ஸ்பெயின் பிரதிநிதிகளையெல்லாம் அரசாங்கம் அழைத்திருக்கிறது. இதன் காரணம் விளங்கவில்லை. பில்பயோ பிரதேசத்தில் கலகக்காரர் 4000 கைதிகளைப்பிடித்து விட்டனர். ஜெனரல் பிராங்கோ தற்போது பில்பயோ பிரதேசத்தில் இருக்கிறராம். அவரே நேரில் காரியங்களைக் கவனித்து வருகிறர்.

#### கலகக்காரர் எண்ணம்

ஜெனரல் மோலா உயிரோடு இருந்தால் அவரை மந்திரிசபை அமைக்கும்படி ஜெனரல் பிராங்கோகேட்டுக்கொண்டிருப்பாராம். இவ்வித முயற்சிக்குக் காரணமாய் இருந்தவர் அந்நியநாட்டார் என்று கூறப்படுகிறது.

#### ஜேர்மேன் மந்திரிக்கு எதிர்ப்பு

ஜெர்மெனியின் அந்நியநாட்டு மந்திரியான பேரன் வான் நியூராத் யூகோஸ்லேவியாவுக்குச் சென்றர். அங்கு அவருக்கு எதிர்ப்புக்கள் பல கிளம்பின. 'நாஸிஸம்' வீழ்க என்ற ஒலி எங்கும் பரவிற்று. ஜெர்மெனிக்கும் யூகோஸ்லேவியாவுக்கும் இடையில் எவ்வித உடன்படிக்கையும் ஏற்படாதென்று கூற இடமிருக்கிறது.

ஜெர்மெனியில் ஹிட்லர் அரசாட்சியால் ரோமன்கதோலிக்க குருமாருக்குப் பலவிதக் கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இக்கஷ்டங்களை உலகமெங்குமுள்ள ரோமன்கதோலிக்க ஸ்தாபனங்கள் கண்டிக்கின்றன. அமெரிக்காவும் இதைக் கண்டிக்கிறது.

#### போலிப் பாதுகாப்பு

ஸ்பெயின் கரை பாதுகாப்பு விஷயமாக ஏற்பட்டிருக்கும் நெருக்கடி ஒருவாறு தீர்ந்து வருவதாகத் தெரிகிறது. இதாலியும் ஜெர்மெனியும் பிரிட்டிஷார் வழி வந்துவிட்டனவாம். இப்பாதுகாப்புச் சங்கத்தார் பகலிலேயே கோட்டைவிட்டவர் போன்று காணப்படுகிறர். இவர் பாதுகாப்பு பாதுகாப்பு என்று கூறிக்கொண்டிருக்கிறர். ஒரு பக்கம் இதாலி ஜெர்மன் படைகள் ஸ்பெயினில் புகுந்த வண்ணமாய் இருக்கின்றன. பாதுகாப்பு உண்மையாயின் அப்படைகள் எவ்வாறு செல்லுதல்கூடும்? இவையெல்லாம் போலியே.

#### அபிஸினியாவில் இதாலி தானம்

அபிஸினியாவில் கொந்தளிப்பான நிலைமை ஏற்பட்டிருப்பதைஉத்தேசித்து மேற்கு அபிஸினியாவை ஜெர்மெனியிடம் இதாலி ஒப்படைக்குமென்று தெரிகிறது.

அபிஸினியாவுக்குத் துறைமுகம் இல்லை. அதனுல் பிரிட்டிஷ் சோமாலிலாந்தை இதாலி வாங்கிக்கொள்ள எண்ணுகிறது. அதற்குப் பதிலாக டானு ஏரிக்கு அருகிலுள்ள செழிப்பான பிரதேசம் பிரிட்டனுக்குக் கொடுக்கப்படுமாம். இதற்குப் போதுமான ஆதரவு இல்லை.

#### பிரிட்டனுக்கு இதாலி மறுப்பு

அபிஸினியாவில் பிரிட்டிஷார் கிறிஸ்தவபாதிரிமார்களை அனுப்பிப் பள்ளிக் கூடங்கள் வைத்துக் கல்வியை அபிவிருத்திசெய்ய விரும்பினர். இவ்வாறு பள்ளிக்கூடங்கள் வைத்தல்கூடாதென்றும் வேறு எவ்வித பிரிட்டிஷ் முயற்சிக்கும் அபிஸினியாவில் இடமில்லையென்றும் இதாலி மறுத்துவிட்டது.

#### ஜப்பானின் துணிகரச் செயல்

தற்போது பிரிட்டிஷார் சிங்கப்பூரைச் சிறந்த கடற்படை ஸ்தலமாக்கவேண்டுமென்று முயல்கிறர். இதனுல் ஏற்படும் பயன் என்ன ? இந்தியாவிலும் ஆஸ்திரேலியாவிலும் ஜப்பான் படைகள் பிரவேசிக்க முடியாது என்பதே. சிங்கப்பூர் முயற்சிகளை யெல்லாம் வீணுக்கிவிட ஜப்பான் கங்கணம் கட்டிக்கொண்டது.

பர்மாவுக்குத் தெற்கே சயாம் பிரதேசத்தில் 'இரா' என்ற இருபத்தைந்து மைல் நீளமுள்ள கால்வாயை வெட்டிவிட்டால் அக்கால்வாய் வழியாக ஒருவிதக் கஷ்டமுமில்லாதபடி ஜப்பானியப்படைகள் வங்காளவிரிகுடாவில் நுழைந்து விடுமாம்.

அவ்வித கால்வாய்க்கு வேண்டிய முயற்சிகளெல்லாம் செய்யப்படுகின்றன. இப்போது சயாமை ஆண்டுவருவார் ஒரு மைனர் அரசர். அதனுல் பிரதம மந்திரியே சர்வாதிகாரிபோன்று விளங்குகிறர். அவருக்கும் ஜப்பானுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருந்து வரு

## கருணை ஒழிந்து விட்டது

'ஹிந்துஸ்தான் ரெவ்யூ' பத்திரிகையில் புரபஸர் பகவத்ராம் குமாரர் பின் வருமாறு எழுதுகிறர்:— பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றுண்டுகளில் போர், அறிவியல், மதம், அரசியல் போன்ற பல துறைகளிலும் கருணை குடிகொண்டிருந்தது. ஒரு மனிதன் தன் அண்டையில் உள்ளவனைச் சகோதரனுகப் பாவித்தான். அக்காலத்து ஐரோப்பாவும் உலகத்தைக் கருணைக் கண்கொண்டு கண்டது. அதனுலேயே மற்ற நாடுகள் ஐரோப்பியரிடம் அன்பாக இருந்தன; அவரது ஆட்சியை வரவேற்றன. அதனுல் உலகத்தின் பற்பல பாகங்களிலும் ஐரோப்பாவிற்கு வெற்றி கிடைத்துவந்தது.

இருபதாம் நூற்றுண்டு ஆரம்பத்திலேயே அக்கருணை ஐரோப்பாவை விட்டு மறைந்துவிட்டது. பேராசைப் பேய் தாண்டவம் புரிகிறது. அன்பு, கருணை முதலியன படிப்படியாக ஒழிந்தன. அடிமை முறை வேறு முறையில் மறுபடியும் திரும்பிவிட்டது.

இன்று ஐரோப்பா ஒரு கூட்டுப்பாதையின் மத்தியில் நிற்பதாக வைத்துக் கொள்வோம். ஒருபக்கம் கருணை நோக்கி ஒருபாதை செல்கிறது. அதற்கு எதிர் திசையாக பேராசை நோக்கி மற்றொரு பாதை செல்கிறது. ஐரோப்பா எப்பாதையை நோக்குதல் வேண்டும் ? கருணைவழி சென்றலேயே மனிதருக்குள் ஒற்றுமை உண்டாகும்.

மனித ஒற்றுமை இரு தூண்களின் பலத்தால் நிற்கிறது. ஒன்று கருணை; மற்றொன்று அறிவு. கருணையின் பணிப்பெண்ணே அறிவு என்னலாம். அதனுல் உலகம் கருணை வழிநிற்பதாக.

---

கிறது. அதனுல் 'இரா' என்ற கால்வாய் வெட்டப்படுமென்றும் நம்பப்படுகிறது. ஆனுல் ஜப்பான் இதைமறுக்கிறது. திருடப்போகிறவன் திருட்டைப்பற்றிய விவரங்களைக் கூறுவானு[illegible]

#### சீனப் புரட்சி

இதுவரையில் வடசீனுவின் ஒரு பாகம் மஞ்சுகோ அரசாங்கத்தின் பார்வையில் இருந்தது. மஞ்சுகோ ஜப்பான் ராஜ்யம். இப்போது அப்பாகத்தில் ஜப்பானுக்கு விரோதமாக ஒரு புரட்சி ஏற்பட்டிருக்கிறது. புரட்சிக்காரர் சீனத்திடம் அனுதாபம் உடையவர். அவர்கள் பல கிராமங்களைத் தங்கள் வசமாக்கி கொண்டார்களாம்.

#### பிரிட்டனின் தைரியம்

தற்போது உள்ள உலக நிலைமை பற்றி பார்லிமெண்டில் கேள்விகள் கேட்கப்பட்டன. பயப்படக்கூடிய நிலைமையில் உலக விவகாரங்கள் இல்லையென்றும் சென்ற வருஷத்தைவிட இவ்வருஷத்தில் நிலைமை நன்ருயிருக்கிறதென்றும் திரு. ஈடன் கூறினர். நிலைமை கேவலமாக யிருக்கிறதென்று அவர் இதுவரை கூறினதேயில்லை. உலகயுத்தம் தொடங்கப்பட்ட பிறகே அவர் அவ்வாறு கூறுவர் போலும் !

#### கமாலின் தியாகம்

தற்போது துருக்கிக்குச் சர்வாதிகாரியாக இருப்பவர் கமால் அட்டாதுர்க். அவர் தம்முடைய சொத்துக்களனைத்தையும் அரசாங்கத்துக்குக் கொடுத்துவிட்டார். அதனுல் அவர் 'துருக்கியின் பிதா' என்று அழைக்கப்படுகிறர்.

#### பாதிரியார் இராஜிநாமா

வின்ஸர் கோமகனுர் திருமணத்தை காண்டர்பரி பெரிய பாதிரியாரின் ஆக்கினைக்கும் மீறிச்சென்று நடத்திய திரு. ஜார்டின் என்ற ஆங்கிலப் பாதிரியார் தமது பதவியை இராஜிநாமா செய்துவிட்டார். இந்த இராஜிநாமாவுக்குக்காரணம் தெரியவில்லை. அந்தரங்கத்தில் பல திருவிளையாடல்கள் நடைபெற்றிருக்கும்.

**சினிமா பகுதி**

## ஸ்டூடியோ செய்திகள்

சென்னை நேஷனல் மூவிடோன்:— இவர்களுடைய சமூகப் படமான "ராஜமோஹனின்" ஷூட்டிங் ஆரம்பமாகிறது. தெலுங்கு "மோஹினி ருக்மாங்கதா" வட ஜில்லாக்களில் வெற்றிகரமாகக் காட்டப்பட்டு வருகிறது.

மோஷன் பிக்சர் ப்ரொட்யூஸர்ஸ் கம்பைன்ஸ்:— ஸ்ரீமான் கே. சுப்ரமண்யம் மானேஜிங் டைரெக்டராகவுள்ள இந்த ஸ்டுடியோ ஜூலைமாத மத்தியில் ஷூட்டிங்கிற்குத் தயாராகிவிடுமாம். முதலில் யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பொரேஷன், ராயல் டாக்கி டிஸ்ட்ரிப்யூட்டர்கள் ஆகியவர்களின் சமூகப் படங்கள் எடுக்கப்படுமாம்.

மதராஸ் யுனைடெட் ஆர்டிஸ்ட்ஸ் கார்ப்பொரேஷன்:— டைரெக்டர் கே. சுப்ரமண்யம் அடுத்தபடியாக "அஹிம்சா சக்தி" என்ற சமூகப் படத்தை எடுக்கப்போகிறர். அப் படத்தில் ஸ்ரீமதி எஸ். டி. சுப்புலக்ஷ்மியும், பேபி சரோஜாவும் நடிப்பார்கள். அதற்கடுத்தபடியாக "பக்த ஸ்வதந்திரதாஸ்" என்ற படத்தை எடுப்பாரெனத் தெரிகிறது. இதில் அநேகமாகப் பாபநாசம் சிவன் நடிக்கக்கூடும் என்றும் சொல்லிக்கொள்ளப்படுகிறது.

ராம்னிக்லால் மோஹன்லால் கம்பெனி:— இவர்கள் இப்பொழுது "மின்னல்கொடி" என்ற படத்தை எடுத்துக் கொண்டிருக்கின்றர்கள் இதில் ஸ்ரீமதி கே.டி. ருக்மணியும், ஸ்ரீ [illegible]. எஸ். ஸ்ரீனிவாஸ ராவ் முதலியவர்களும் நடிக்கின்றனர்.

கணேஷ் பில்ம்ஸ்:— இவர்களுடைய "கவிரத்ன காளிதா"ஸின் ப்ரத்யேகக் காட்சியொன்று பத்திரிகை நிருபர்களுக்கு 9௳ காலையில் காட்டப்பட்டது. இப்படம் சென்னை ப்ராட்வே டாக்கீஸில் கூடியவிரைவில் ஆரம்பமாகும்.

முருகன் டாக்கீஸ்.—இவர்கள் [illegible]தவதத்தா ஸ்டுடியோவில் "கிழட்டு மாப்பிள்ளை" என்ற ஒரு காமிக் படத்தை எடுத்து வருகிறர்கள். [illegible]னுல் இது "பக்த துளஸிதாஸ" [illegible]ன் வெளியிடுவதற்காகவல்ல வென்று தெரிகிறது.

ஸேன்ட்ரல் ஸ்டுடியோ, கோவை:— இவர்களுடைய "துக்காராம்" தெலுங்கு, தமிழ்ப் படங்களின் ஒத்திக்கை [illegible] நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. இப்படங்களில் ஸ்ரீ. முசிரி சுப்ரமண்ய ஐயரும், ஸி. எஸ். ஆர். ஆஞ்சனேயலுவும் நடிக்கின்றனர். ஸ்ரீமான்கள் எம். எல். டாண்டனும், ஸி. வி. நாய்க்கரும் டைரெக்ட் செய்து வருகின்றனர்.

[illegible]பிரிமியர் ஸினிடோன் :— "ஸ்ரீ [illegible]தலீலா" ஷூட்டிங் நடந்துகொண்டிருப்பதாகத் தெரிகிறது.

மைசூர் சவுண்டு ஸ்டுடியோ :— இவர்களுடைய "நவீன நிருபமா" என்ற தமிழ் பேசும்படம் முடிவடைந்து 'எடிடிங்'கில் இருக்கிறது. இக்கதை பிரபல ஆங்கில நாவலாசிரியர் [illegible]ன் ரெயினல்ட்ஸ் எழுதி "ராபர்ட் மாக்கேர்" என்ற கதையைத் தழுவி[illegible]. இப்படத்தை ஏககாலத்தில் பல [illegible]களில் காண்பிக்க ஏற்பாடாகி இருக்கிறதாம்.

### சினிமாவில் நடனம்

[illegible]யில் அஸாரி என்ற அம்மையார் நடனஞ்செய்வதில் சிறந்தவர். இக்காலத்து சினிமாக்களில் நடத்தப்படும் நடனங்களின் சிறப்பு வரவரக் குறைந்துவரக் காண்கிறோமென்று அவ்வம்மையார் சொல்கிறர். இவ்வாறு குறைந்து வருவதற்குக் காரணத்தையும் அவ்வம்மையாரே கூறுகிறர். நடனத்தின் பெருமை இவ்வாறு குறைவதற்குக் காரணமாய் உள்ளவர் எவரும் இலர். படமே இதற்குக் காரணமாகும். படம் பிடிக்கும்போது நடனத்துக்குப் போதிய கால அவகாசம் தருவதில்லை. அதனுல் அதன் பெருமை குறைகிறது. நடிகையின் மனத்தில் உண்டாகும் ஒருவித உற்சாகமே நடனத்தைச் சிறப்பிக்கும். அவ்வித மன உற்சாகம் நடனம் ஆரம்பித்த பிறகு சிறிது நேரம் கழிந்தே உண்டாகும். அது உண்டாவதற்கு முன்னர் நடனத்துக்காகக் குறிப்பிட்ட காலம் கழிகிறது. அதனுல் நடனம் எவ்விதத்தில் சிறந்து விளங்கும் என்று அம்மையார் கேட்கிறர். அதனுல் நடனத்துக்குப் போதிய நேரத்தை அளித்தல்வேண்டும். அப்போதே நடனக்கலை சிறப்புப் பெறும்.

### ஆனைச் சிறுவன்

தற்போது சென்னையில் காண்பிக்கப் பட்டுவரும் ஆனைச்சிறுவன் (எலிபண்ட் பாய்) என்ற படம் லண்டன் பில்ம்ஸ் கம்பெனியாரால் எடுக்கப்பட்டது. பட்டாபிஷேக வாரத்தில் அது லண்டன் மாநகரத்தில் காண்பிக்கப் பட்டது. ஒரே நாளில் ஐயாயிரம் பவுன் வசூலாயிற்றும். இந்தியா சம்பந்தமாக மற்றொரு படக்காட்சியை எடுக்க அக் கம்பெனியார் ஆரம்பித்துவிட்டனர். அரசமுரசு (டிரம்ஸ் ஆப் தி கிங்) என்ற படத்தை எடுப்பதற்காக அக்கம்பெனியார் வடமேற்கு எல்லைப்புற மாகாணங்களுக்கு வந்திருக்கின்றனர்.

### ஒரு படத்துக்கு 37 ஆயிரம் பவுன்

லெஸ்லி ஹாவர்ட் என்ற பிரிட்டிஷ் சினிமா நடிகை தற்போது அமெரிக்காவில் இருக்கிறர். அங்கு அவருக்கு ஒரு படத்தில் நடிப்பதற்காக 37 ஆயிரம் பவுன் கொடுக்கப்பட்டதாம். இது சுமார் ஐந்து லட்சம் ரூபாய்க்குச் சமமாகும். அமெரிக்காவில் நிகலஸ்ஷெங்க் என்பவர் 61 ஆயிரம் பவுன் பெற்றுராம். இவர்களும் வருமானவரி கொடுக்காமல் இருக்கமுடியுமா ?

### விடுதி சினிமா

மாணவர்களுக்கு உணவு விடுதிகளோடு கூடிய கல்லூரிகள் கட்டுவது போன்று சிங்கப்பூரில் விடுதிகளோடு கூடிய சினிமாசாலை ஒன்று 'தோபிகாட்'டுக்குஅருகிலுள்ள மலைப்பிரதேசத்தில் கட்டப்படுகிறது. அதில் இளைப்பாறும் இடங்களும், உணவுச் சாலைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

### வெனிஸ் நகரத்துக்கு இந்திய பிலிம்

வெனிஸ் நகரத்தில் ஐந்தாவது சர்வதேச பிலிம் காட்சி ஆகஸ்ட் மாதம் 10-ந் தேதியிலிருந்து நடைபெறும். அக்காட்சியில் இந்தியாவின் சார்பாக கல்கத்தா நியூ தியேட்டர்ஸ் லிமிடெடால் தயாரிக்கப்பட்ட 'பிரெஸிடெண்ட்' என்ற படமும், பூனா பிரபாத் பிலிம் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்ட 'பக்த துக்காராம்' என்ற படமும் அனுப்பப்படும். வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் மதிப்பை நமது தமிழ்ப் படங்கள் பெறவில்லை போலும் !

### புது ஊமைப்படம்

இந்நாளில் உலகமெங்கும் பேசும் படங்களே தயாரிக்கப் படுகின்றன:

ருஷ்யாவில் பேசாப் படம் ஒன்று தயாரிக்கப் படுகிறது. மொழிகஷ்டமில்லாமல் இப்படம் உலகம் முழுவதும் காண்பிக்கப்படும். இதற்குச் 'சுதேசிகளின் சனியாகிய வெளிநாட்டு மிஷனரிகள்' என்னும் பெயர். வெளிநாடுகளில் மத குருமார் செய்யும் அநியாயங்களைக் காட்டுவது இப்படம். இப்படத்தில் சுதேசிகளே ஹீரோவர்கள். மத குருமாராக இருப்போர் உடல் முழுவதும் கவசம் போட்டுக்கொண்டு அதன்மீது சந்யாசி உடையை அணிந்திருக்கிறர்.

### இந்திய நடனத்துக்கு மதிப்பு

ஸ்விட்ஸர்லந்து இந்திய நடனத்தின் பெருமையை அறிந்துகொண்டது. உதயசங்கரும் அவரது கோஷ்டியாரும் செய்த நடனம் ஸ்விட்ஸர்லந்தையே தலைகீழாகப் புரட்டிவிட்டதென்று கூறிவிடலாம். அதனுலேயே ஸ்விட்ஸர்லந்து பத்திரிகைகளில் ஒன்றுன 'நேனிஜூரிச் ஜீடங்' "முழுவளர்ச்சியும் கவர்ச்சியும் பெற்ற இந்திய நடனத்தின்முன் நம்நாட்டு நடனம் தலை வணங்கி நிற்கிறது" என்று எழுதியிருக்கிறது.

### இந்தியாவில் சினிமாத்தொழில்

1921-ம் வருஷம்முதல் 1935-ம் வருஷமவரை இந்தியாவில் காட்டப்பட்ட சினிமாப் படங்களைப் பற்றிய புள்ளி விபரங்களை 'இந்திய சலனப் பட சங்கத்தார்' வெளியிட்டுள்ளனர். அதில் காணப்படும் சாரம் வருமாறு:—

இந்தியாவில் சினிமாத் தணிக்கை போர்டு 1920-ம் வருஷம் வேலைசெய்யத் தொடங்கிற்று.

அவ்வருஷத்தில் 2200 படங்கள் தணிக்கை செய்யப்பட்டன.

இந்தியாவில் தயாராகும் படங்களின் தொகை வரவர அதிகரிக்கிறது.

இந்தியாவில் தயாரிக்கப்படும் படங்கள் தொகை இங்கே காட்டப்படும் வெளிநாட்டுப் படங்களின் தொகைக்குச் சரியாக வந்துவிட்டது.

பேசாப் படங்கள் அடியோடு மறைந்தன. பேசும் படங்களே இப்பொழுது காட்டப்படுகின்றன.

### பாலாமணி

ஈரோடு ஷண்முகாநந்தா டாக்கீஸார் தயாரித்துள்ள "பாலாமணி" என்ற தமிழ் பேசும் படத்தைப் பெங்களூர் ஸ்டார் பிச்சர் கார்ப்பொரேஷன் கம்பெனியார் வாங்கி விட்டார்.

### ரெனைஸான்ஸ் தியேட்டர்ஸ்

சென்னை ரெனைஸான்ஸ் தியேட்டர்ஸார் "ஜலஜா", "கீர்த்தி" என்ற இரு படங்களைப் பிடிக்கப் போகின்றனர். இப்படங்களில் பரத நாட்டியத்தில் புகழ் பெற்ற வரலக்ஷ்மி, பானுமதி சகோதரிகள் நடிப்பார்கள். இப்படங்களின் 'ஷூட்டிங்' பம்பாய் சாகர் மூவிடோனில் ஜூலை முதல் வாரத்தில் ஆரம்பமாகும்.

"ஜலஜா" என்னும் கதை ஒரு தாஸியின் வாழ்க்கையைச் சித்தரிப்பதாகும். இதில் ஸ்ரீமதி பானுமதி முக்கிய பாகம் தாங்கி நடிப்பார்.

"கீர்த்தி" என்ற படம் ஹரிஜனப் பிரச்னையை அடிப்படையாய்க் கொண்டதா யிருக்கும். இக்கதையில் ஒரு ஹரிஜனப் பெண் ஒரு பிராமண வாலிபனைக் காதலித்து இருவரும் மணந்து கொள்வார். ஸ்ரீமதி வரலக்ஷ்மி ஹரிஜனப் பெண்ணுகவும், ஸ்ரீமான் சேஷகிரி அவளுடைய பிராமணக் காதலனுகவும் நடிப்பார்கள்.

ஹரிஜனப் பெண்ணின் சிறு வயதில் நடிக்க வேண்டிய பாகங்களில் பாலிய நடிகை ருக்மணி நடிப்பாள். இத்துடன் இப்பெண்ணின் பெற்றேரும் இப்படத்தில் நடிப்பார்கள்.

இப்படங்களில் வரலக்ஷ்மி பானுமதி சகோதரிகளின் பரத நாட்டியம் பிரதானமாக விளங்கும்.

### ராஜாஜி பார்வையில் தேசியப் படம்

சென்னையில் ஒரு தேசியப்படம் எடுக்க ஏற்பாடாகிக் கொண்டு இருக்கிறது. காங்கரஸ் தலைவர் ஸ்ரீ ராஜாஜியின் உதவியின் பேரிலேயே இப் படம் எடுக்கப்படும். கதை எழுதியாய்விட்டது. நடிகர்களும் பொறுக்கப்பட்டுவிட்டார்கள். ஸ்டுடி

## பகிரங்கத் திருடுகள்

நமது நாட்டில்தான் திருடர்கள் இருக்கிறர்கள் எனறு எண்ணிவிட வேண்டாம். மேற்குநாடுகளிலும் திருடர்கள் பலர் இருக்கிறர். அங்குப் பகிரங்கமாகவே திருடுகள் நடைபெறுகின்றன.

லண்டன் தபாலாபீஸ் ஒன்றில் தபால் முத்திரை முதலியவை வைக்கப் பட்டிருந்த இரும்புப்பெட்டி ஒன்று திருடு போயிற்றும். அதில் 1200 பவுன் மதிப்புள்ள சாமான்கள் இருந்ததாகக் கூறப்படுகிறது.

மற்றொரு நாள் சில திருடர் ஒரு தபாலாபீஸில் புகுந்தனர். அங்கிருந்த இரும்புப்பெட்டியை எடுத்துக்கொண்டு வெளிவந்தனர். வெளியில் ஒரு தாணுக்காரன் பார்த்துவிட்டான். திருடர் பெட்டியைப் போட்டுவிட்டு ஓடிவிட்டாரா ? தாணுக்காரனுவது அவர்களைப் பிடித்தானு ? இரண்டும் இல்லை. பின்னை என்ன நடந்தது? வெளியில் அமெரிக்க கார் ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது.

திருடர் பெட்டியை அதில்வைத்துக் கொண்டு கம்பி நீட்டிவிட்டனர். பல சந்துகளின் வழியாகக் கார் விரைவாகச் சென்றுவிட்டது. தாணுக்காரன் விழித்தான்.

இன்னெரு அதிசயமான திருடைக் கேட்கிறீர்களா ? எமிலிஸ்காட் என்ற பெண்ணுக்கு வயது 20. சில நாட்களுக்குமுன் அவளுக்குக் கலியாணம் நடந்தது. கலியாணம் நடந்த ஒரு வாரத்திற்குள் போலீஸார் அவளைக் கைது செய்தனர். ஏன் ? அவள் பல சரக்கு மளிகைக்கடைகளிலிருந்து உணவுக்கு வேண்டிய சாமான்களைத் திருடிவிட்டாளாம். இதற்காக அவள் மாஜிஸ்திரேட் முன் நிறுத்தப்பட்டாள். அவளுடைய புருஷனுக்கு நல்ல உத்தியோகம் ஒன்று வழங்கப்பட்டது. அதுமுதல் ஸ்காட் திருடுவதில்லையாம்.

### சமாதிக்குள் இன்ப வாழ்வு

உயிரோடு சமாதியில் வாழ்பவர்

ஐக்கீ அபந்தீ கோஷா என்பவர் பெரியபணக்காரர். அவர் வாழ்க்கையை வெகுசந்தோஷமாக நடத்திவந்தார். தம்முடைய மரணத்துக்குப் பின்னர் தம்முடைய உடலைச்சேர்ப்பதற்காக காஹிராக்கல்லறையில் ஓர் இடத்தை விலைக்கு வாங்கினர். அவ்விடத்தில் ஆறு அறைகளைக்கட்டியிருக்கிறர். ஓர் அறை தமக்காகவும் மற்ற ஐந்து அறைகள் தம் ஐந்து நண்பர்களுக்காகவும் கட்டப்பட்டன. இந்த ஆறு அறைகளல்லாமல் இரண்டு ஸ்நாந அறைகள் இருக்கின்றன. ஒரு டெலிபோனும் இருக்கிறதாம். இவ்வளவு வசதிகளை ஏற்படுத்தியபிறகு அவர் வெளியில் வாழ இஷ்டப்படவில்லை. அவர் இப்போது சமாதிக்குள் இன்பமாக வாழ்ந்து வருகிறர்.

---

யோவும் அமர்த்தப் பட்டுவிட்டது. இக்கதை எல்லாவிதத்திலும் சென்னை வாழ்க்கையைச் சித்தரிப்பதாயிருக்கும். இதில் காங்கரஸின் பலத்தையும், கதர் முன்னேற்றத்தையும், மற்ற தேசிய விவகாரங்களின் அபிவிருத்தியையும் சித்தரித்துக் காண்பிக்கப்படும்.

இதில் நடிப்பவர்கள் எல்லாரும் அமெச்சூர்கள் ; படித்த வாலிபர்கள். இதன் ஒத்திக்கைகள் கூடிய சீக்கிரம் ஆரம்பமாகும். இப்படம் சென்னை ஸ்டுடியோ ஒன்றிலேயே தயாரிக்கப்படும். ஸ்ரீராஜாஜியே இப்படத்தை நேரில் மேற்பார்வை பார்த்துவருவார்.

படம் பிடிக்கப்பட்டு வருமுன் அதன் தன்மையை அறியாது முன்னுல் வானமளாவப் புகழ்ந்து விளம்பரம் செய்வது தீங்கு விளைவிக்கும் என்று தலைவர் அபிப்பிராயப்படுகிறர். இதனுல் ரஸிகர்கள் பெரிதும் ஏமாற வேண்டியிருக்கிறது. ஆகையால் இப்படத்தின் விளம்பர விஷயங்களைத் தலைவர் தாமே ஏற்று நடத்துவார். ஆரம்ப வேலைகளுக்கான செலவுகளுக்காகப்பட முதலாளிகள் இவரிடம் ரூ. 15,000 ஒப்படைத்திருப்பதாகத் தெரிகிறது.

# மலையாள மந்திரி மத்தளம் கொட்டுகிறார்!

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

‘ கூர்மா கம்பெனி ’ கோவிந்தா !

மாஞ்செஸ்டர் கார்டியன் பின்வருமாறு தலையங்கம் எழுதியிருக்கிறது :-

சட்டசபைகளைக் கூட்டி மறுபடியும் காங்கரஸ்காரருடன் கலந்து பேசும் காலம் வந்துவிட்டது. அந்தச் சமரஸப் பேச்சு வெற்றிகரமாக முடிவதற்குரிய அறிகுறிகள் காணப்படுகின்றன. ‘அல்பாயசு மந்திரிகள்’ வகுத்திருக்கும் திட்டம் எதுவாயிருப்பினும் சரி. இந்த அரசியலின்படி அம்மந்திரி சபையின் ஆயுள் பாவம் குறைச்சல். அம்மந்திரி சபை நிலைக்காது என்பது நிச்சயம். இந்த ஆறு மாத நாடகம் முடிந்து சட்டசபை கூட்டப்படும்பொழுது மந்திரிமார் பாடு திண்டாட்டமாகிவிடும்.

கவர்னர்கள் சொந்த ஹோதாவில், மந்திரிமார் காரியங்களில் தலையிடாதிருப்பதாகச் சொன்னால்கூட காங்கரஸ்காரர் திருப்தி யடைந்துவிடுவார். அதும் தும் உடனே சட்டசபைகளைக் கூட்ட வேண்டும். செப்டம்பர் மாதம் வரை காத்திருக்கக்கூடாது.

இதே கருத்தை ஜார்ஜ் லான்ஸ்பரி காமன்ஸில் வெளியிட்டார். மகாத்மா காந்தியின் கோரிக்கைகள் மிக முக்கியமானவை யென்றும் நியாயமானவை யென்றும் அவர் கூறினார்.

மலைவிழுங்கி மகாதேவன்

இப்பொழுது உதவி இந்தியா மந்திரியா யிருப்பவர் ஸ்டான்லி. அவர் இப்பொழுது தான் முதன் முதலாகத் தமது திருவாயைத் திறந்தார். காங்கரஸுக்கும் அரசாங்கத்துக்கும் இது சம்பந்தமான சம்பாஷணை வெகு நாஸுக்காக நடைபெறவேண்டுமாம். காமன்ஸில் இந்த மாதிரித்தாறுமாருக ஏதாவது கேட்டுகொருக்கினல் நிலைமை விபரீதமாய் விடுமாம். ஏ! அப்பா! இவர் பெரிய மலைவிழுங்கி மகாதேவன் போலிருக்கிறதே ! விபரீதமாக இன்னும் வேறு பாக்கியிருக்கிறதா ? என்ன நாஸுக்கான பேச்சு !

இன்னும் சிறிது தாமதித்தால் காங்கரஸ் இறங்கி வருமென்று ஸ்டான்லி நினைக்கிறார் போலும் ! அப்படியிருந்தால் அந்த நினைவை அடியோடு தொலைத்து விடவேண்டியது. மகாத்மாகாந்தி இனிமேல் அரசாங்கம் தான் இறங்கவேண்டுமென்று கூறிவிட்டார். மஸானி என்ன சொல்கிறார் ? இவ்வளவு தூரம் விட்டுக் கொடுத்ததே தவறு என்கிறார்.

ராஷ்டிரபதியின் சாட்டை

ராஷ்டிரபதி கல்கத்தாவில் செய்த கர்ஜனையைக் கவனியுங்கள்.

“பெய்ஸ்பூர் காங்கரஸ் புது அரசியலை உடைக்கப்போவதாகத் தீர்மானித்தது. அது திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட வில்லை யென்று ஜெட்லந்து கூறுகிறார். உங்கள்சார்பில் காங்கரஸ் தலைவர் என்ற ஹோதாவில் நான் சொல்கிறேன். அந்தத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ள முடியவே முடியாது. என்னவாயினும் சரி. இதை இந்தியா மந்திரி அறியட்டும்.

ஆதலால் அரசாங்கம் காங்கரஸ் இனியும் விட்டுக்கொடுக்கு மென்று மனப்பால் குடிக்க வேண்டியதில்லை.

“இந்திய அரசியல் வாதிகளுக்கு அரசாங்கத்தின் மீது எல்லையற்ற அவநம்பிக்கை யுணர்ச்சியிருக்கிறது. அதைப் போக்க அரசாங்கமே முன் வரவேண்டும்”

லான்ஸ்பரி மேற்குறித்தபடி சொன்னதை அரசாங்கம் அலக்ஷியம் செய்யக்கூடாது. மிதவாதிகளில் ஒருவரான பண்டித ஹிருதயநாத்குன்ஸ்ரு என்ன சொல்கிறார் ? சென்ற சில வருஷங்களாகவே அரசாங்கம் இந்தியமக்களின் நன்மதிப்பைப் பெறவில்லையென்கிறார். அதில் சந்தேகம் வேறு ? இந்தியாவில் பொங்கி எழும் சுதந்திர தாகத்தையும், ஐரோப்பாவில் ஹிட்லரும், முஸோலினியும், மற்ற வல்லரசுகளும் கொண்டுள்ள இரத்த வெறியையும் அரசாங்கம் கவனித்துக் காங்கரஸுடன் இணங்கி வந்தால் நிலைமை விபரீதமாகாமலிருக்கும்.

# பிரிட்டனிலும் மூடப் பழக்கங்கள் உண்டு

## பழைய சம்பிரதாயங்களை விடவில்லை

கூத்துக்களும் பகைமைகளும்

ஹிந்துக்கள் மூடக் கட்டுக்களும், பழக்க வழக்கங்களும் உடையவர்கள் என்று நம்மை ஆங்கிலேயர்கள் இகழ்கிறார்கள். நம்மவரில் சிலரும் அதைக் கேட்டுக்கொண்டு குதிக்கின்றனர். இங்கிலாந்தில் நடைபெறும் சில மூடப் பழக்க வழக்கங்களை ‘ஜான்புல்’ என்றபத்திரிகை குறிப்பிடுகிறது. அதைத் தழுவிப் பின் வரும் கட்டுரை எழுதப்படுகிறது :—

இந்த இருபதாம் நூற்றாண்டிலும் கூட இங்கிலாந்து தன் பண்டைப் பழக்க வழக்கங்களையும் மூடக் கொள்கைகளையும் அட்டைபோலக் கெட்டியாகப் பிடித்துக்கொண் டிருக்கிறது. இங்கிலாந்துக்குப் புதிதாக வருபவர் இந்த விசித்திரமான பழைய சம்பிரதாயங்களைக் கண்டு அதிசயிப்பர்.

நமது நாட்டில் புலிவேஷம், பகல்வேஷம் முதலியன இருப்பதுபோல் அங்கே ‘காட்டுமிராண்டி’ வேஷம் ஒன்றுண்டு. அவ்வேஷம் போட்டுக்கொள்பவனது கண் மாத்திரந்தான் நமக்குத் தெரியும். அவன் உடம்பெங்கும் இலை, தழை, மாக்கிளை முதலியவைகளைக் கட்டிக்கொண்டு தெருத்தெருவாகச் சுற்றித் திரிவான். முன்பு ஒரு கொடிய அரக்கன் இருந்தானாம். அவன் சூரியனுக்குப் பலி கொடுப்பதற்குப் பல மனிதர்களைச் சிறைப்படுத்தியிருந்தானாம். அவனைக் குறிப்பதற்கே அந்தக் ‘காட்டுமிராண்டி’ வேஷம் போட்டுக்கொள்வதாம்.

தாமஸ் கிராக்கர் என்று ஒரு கொள்ளையன் பிக்பரி என்ற இடத்தில் வசித்துவந்தான். அவன் தூக்கிலிடப்பட்டான். அந்நாள் இப்பொழுதும் அங்கே கொண்டாடப்படுகிறது.

பெரிய பெரிய மனிதர்கள்கூட அக் கொண்டாட்டத்துக்குப் போவார்கள். அந்தக் கொள்ளைக்காரனைப்போல ஓர் உருவம் செய்யப்பட்டுத் தூக்கிலிடப்படும். அதைக் கண்டு எல்லாரும் ஆரவாரிப்பர். நம் நாட்டில் கொடும்பாவி கட்டி இழுத்தல் என்று அதுமாதிரியான வழக்கம் ஒன்றிருக்கிறது.

பழைய நாட்களில் இங்கிலாந்தில் நடைபெற்றுவந்த கூத்துகள் இன்னமும் சிற்சில இடங்களில் நடிக்கப்படுகின்றன.

அறுநூறு வருஷங்களுக்கு முன்பு ஸ்காட்லந்தில் இங்கிலீஷ்காரர் ஒரு கூட்டமாகப் படுகொலை செய்யப்பட்டனர். அது இப்பொழுதும் அங்கே கொண்டாடப்படுகிறது.

## 37 வயதில் பாட்டி

இங்கிலாந்தில் இளாரா மேடர்ஸ்ட் என்ற அம்மையார் தம் 37-ம் வயதில் பெண் மூலமாக ஒரு பேத்தியைக்கண்டார்களாம். இவ்வளவு சிறுவயதில் பேத்தியைக்கண்டது அதிசயமென ரைனல்ட்ஸ் பத்திரிகை அதிசயமாகக் கூறுகிறது. இந்தியாவில் சுமார் 25 வயதுக்குள் பேத்தியைக் கண்டாரும் இருக்கிறார் என்பதை மேற்கு நாட்டார் அறியமாட்டார் போலும். மெடர்ஸ்ட் அம்மையாரின் பெண்ணின் வயது 17.

# லாபமில்லாமலா சண்டை?

## இதாலியும் ஜெர்மெனியும் யுத்தம் செய்வதேன்?

ஸ்பெயின் சுரங்கங்களும் அந்நிய நாடுகளும்

‘எகனமிஸ்ட்’ என்ற பத்திரிகையில் பலவேறு நாடுகளின் பொருளாதார - அரசியல் - இராணுவ சம்பந்தம் பற்றி ஒரு கட்டுரை எழுதப்பட் டிருக்கிறது. அக்கட்டுரையால் தற்போதைய உலக நிலைமையின் காரணம் விளங்குகிறது. அதன் சாரம் வருமாறு :—

உலகத்தின் பல வேறு நாட்டையும் பொருளாதாரம் நெருக்கடி செய்து வருகிறது. அந்தந்த நாட்டின் அரசியலும் அந்நெருக்கடியின் பயனாகவே மாறுபட்டு வருகிறது. தற்போது ஸ்பெயினில் ஏற்பட்டுள்ள சண்டையும், இதன்பாற் பட்டதே.

ஸ்பெயின் சண்டையில் கலகக்காரருக்கே ஜயமுண்டான போதிலும் ஸ்பானிய மக்கள் இதாலி - ஜெர்மெனி அதிகாரத்துக்கு உட்பட்டு இருக்க மாட்டார்கள். ஸ்பெயினில் சுரங்கங்களும் உலோகங்களும் அதிகமாக இருக்கின்றன. ஸ்பானியர் அதன் லாபத்தை அந்நியருக்கு விட்டுவிடச் சம்மதியார்.

தற்போது அரசாங்கமே நடத்தப்பட்டு வரும் வாலன்ஸியா நகரத்துக்கு அருகில் பெரிய சுரங்கங்கள் இருக்கின்றன. கார்டோபாவில் ஸ்பெயினிலுள்ள சுரங்கங்களில் மிகச் சிறந்த சுரங்கம் ஒன்று இருக்கிறது. அல்மாடன் பிரதேசத்தில் பெரிய பாதரசச் சுரங்கங்கள் இருக்கின்றன. அவை கலகக்காரர் வசமாயின.

பில்போ பிரதேசத்தில் பெரிய இரும்புச் சுரங்க மொன்றிருக்கிறது. இதுவே உலகத்தில் பெரிய இரும்புச் சுரங்கம். இதைத் தம் வசமாக்கிக்கொள்ளவே கலகக்காரர் அப்பிரதேசத்தை எதிர்த்தனர். இது கலகக்காரர் வசமாயின் அரசாங்கத்துக்கு ஆயுதங்களுக்கு வேண்டிய இரும்பும் கிடைக்காமல் போகும்.

பிரிட்டன் இறக்குமதி

பழவகைகளும் ஸ்பெயினில் அதிகமாகக் கிடைக்கின்றன. ஷெரி முதலிய பழங்களையும் இதர காய்கறிவகைகளையும் பிரிட்டன் ஸ்பெயினிலிருந்தே இறக்குமதி செய்கிறது.

ஆல்மடன் பிரதேசத்திலுள்ள பாதரசக் கிணறுகளிலிருந்து 1564-ம் வருஷம் முதல் 1907-ம் வருஷம்வரையில் 1,69,000 டன் எடையுள்ள பாதரஸம் எடுக்கப்பட்டிருக்கிறது. இதுவே உலகத்தில் பெரிய பாதரஸ சுரங்கம். பார்ஸிலோனுவுக்குத் தென்மேற்கில் 28 மைல் நீளமும் 10 மைல் அகலமுமுள்ள பிரதேசத்தில் வெடியுப்பு கிடைக்கிறது.

ஸ்பெயின் போரில் ஜெனரல் பிராங்கோவுக்கு வெற்றி யுண்டாகுமாயின் ஸ்பெயினில்உண்டாகும்தாதுப்பொருள்களை எவ்விதத் தடையுமின்றி இதாலியும் ஜெர்மெனியும் பெற எண்ணியிருக்கின்றன. ஜெர்மெனியிலும் இதாலியிலும் இரும்புத் தொழிற் சாலைகள் பல இருக்கின்றன. அவைகளுக்குவேண்டிய இரும்பு அத்தேசங்களில் கிடைப்பது இல்லை. அதனுல்அவை ஸ்பெயினை எதிர்பார்க்கின்றன.

திண்டாட்டம்

தற்போது கிரேட் பிரிட்டன் மட்டும் வருஷத்தில் ஸ்பெயினிலிருந்து பத்து லட்சம் டன் எடையுள்ள இரும்பை இறக்குமதி செய்கிறது. இதில் இதாலியும்ஜெர்மெனியும்பங்குபோட்டுக்கொண்டால் கிரேட்பிரிட்டன் பாடு திண்டாட்டமே. எல்லாம் ஸ்பெயின் சண்டையின் முடிவைப் பொறுத்திருக்கின்றன.

# செத்த பிறகு நடப்பதென்ன?

## நம் முன்னேர் கண்டுபிடித்த உண்மை

விஞ்ஞானிகள் கண்டார்கள்

மனித உடலில் மின்சாரம்

ஒருமனிதன் இறந்தபின் அவனது உயிர் என்ன வாகிறது ? இவ்விஷயம் பற்றி லண்டனில் இரு விஞ்ஞானிகள் ஓயாது ஆய்ந்து வருகிறார்கள். ஒருவருஷம் இரண்டு வருஷமாக அவர்கள் ஆராயவில்லை; ஐந்து வருஷங்களாக ஆராய்கிறார்கள். ஆராய்ந்ததில் என்ன கண்டார்கள் ? ஒவ்வொருமனிதனிடத்திலும் மின்சாரசக்தி யிருக்கிறது என்று அறிந்தார்கள். மிருகங்களையே அவர்கள் முதன் முதல் பரிசைஷ செய்தார்கள்.

ஒவ்வொரு பிராணியும் குறிப்பிட்ட ஓர் அளவு மின்சாரசக்தியுடனேயே பிறப்பதாக அவர்கள் கண்டுபிடித்தார்கள். பற்பல விதமான பிராணிகளின பலவித நிலைகளில் அம்மின்சாரசக்தி எப்படியிருக்கிறது என்று கண்டுபிடித்துப் புள்ளி விவரங்கள் எடுக்கப்பட்டன. புத்தி அதிகமுள்ள பிராணிகளுக்கே அந்த மின்சாரசக்தி அதிகமாயிருப்பதாகவும், புத்திசாதுர்யம் குறைவாயுள்ள பிராணிகளிடம் மின்சாரசக்தி குறைவாயிருப்பதாயும் கண்டுபிடிக்கப்பட்டது.

இறந்தவுடனே அந்தச் சக்தி எங்கேயோ மாயமாய் மறைந்து போகிறதாம். அதே விஷயம் தான் மனிதரிடமும் இருப்பதாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. ஒரு மனித சரீரத்தில் 500 ‘வோல்ட்’ மின்சார சக்தி யிருக்கிறதாம்.

ஆனல் ஒரு வித்தியாசம். மனிதர் எவ்வளவுக் கெவ்வளவு நல்லொழுக்கம் அதிகம் உள்ளவரா யிருக்கின்றனரோ அவ்வளவுக் கவ்வளவு அந்த மின்சார சக்தியும் அவ்னரிடம் அதிகமா யிருக்கிறதாம்.

ஒருவர் இறந்ததும் அவருள்ளிருக்கும் மின்சார சக்தி மாயமாய் மறைந்து போகிறதே! அது எங்கே போகிறது ? இந்த விஷயத்தை ஆராய்வதிலேயே இப்பொழுது அந்த நிபுணர்கள் அதிகமாக ஈடுபட்டிருக்கிறார்கள். அதற்காகப் புதிய இயந்திரம் ஒன்றையும் அவர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அந்தக் கருவி என்ன செய்யும் தெரியுமா ? தான் இருக்கும் இடத்தில் எவ்வளவு சிதோஷ்ணம் இருக்கிறதோ அதைக் கொண்டே மின்சார சக்தியின் அளவைக் குறித்துவிடும். ஒவ்வொரு மனிதனையும் சுற்றி ‘ஆரா’ என்ற வஸ்து இருக்கிறது என்ற கொள்கைப்படியே அந்தக் கருவி கண்டுபிடிக்கப் பட்டுள்ளதாம்.

அந்தக் கருவியினைக் கொண்டு ஒரு ஆஸ்பத்திரியின் அறையில் உள்ள மின்சார சக்தியைக்கண்டுபிடித்து விடலாம்.

ஒருவர் இறந்தால் அந்தக் கருவியிலுள்ள முள் ஆடிக்கொண்டிருக்குமாம்.

இதிலிருந்து விஞ்ஞானிகள் இப்பொழுது என்ன சொல்கிறார்கள்? ஒரு மனிதன் இறந்ததும் அவர் சரீரத்திலுள்ள மின்சார சக்தி தேகத்தை விட்டு வெளிக் கிளம்பி விடுகிறது. ஆனல் அது எங்கும் ஓடிப் போய்விடவில்லை. சில காலம் வரை அந்தப் பிரதேசத்திலேயே ஈதருடன் கலந்து வட்டமிட்டுக்கொண் டிருக்கிறது என்கிறார்கள்.

ஆனல் இந்த உண்மை புதிதன்று. ஒருவன் இறந்தால் அவனது பஞ்சபூதங்களும் பல இடங்களைச் சுற்றிக் கொண்டே இருக்கும் என்பது நமது பெரியோர் கண்ட உண்மை. வீட்டைச் சுற்றும் ஒரு பூதம்; சுடுகாட்டைச் சுற்றும் ஒருபூதம் என்று சொல்வதுண்டு. அந்தப் பூதங்களைத் திருப்தி செய்வதற்குப் பல கருமங்களைச் செய்யுமாறு நமது பெரியோர் கூறிச் சென்றனர்.



# கம்பர் கண்ட சோவியத் ஆட்சிமுறை

(வித்வான் மா. இராசமாணிக்கம், P.O.L.)

பிறரால் தமக்கொரு தீங்கும் நேராதென்னும் சஞ்சலம் அற்ற மக்கள் நினைவே சுதந்திர உணர்ச்சியின் மெய்த் தன்மையாகும். ஆனல் இந்நாளிலோ வெனின், ‘பிறர்செய்யும் தீங்குகளினின்றும் தப்பித்துக்கொள்ளப் பாடுபடுதலே சுதந்திரம்’ என்று பலரால் கருதப்படுகிறது. இக்கால மக்கள் விரும்பும் சுதந்திரத்தினை ஒரு புடைவைத்து, கம்பர் கூறும் சுதந்திர வாழ்க்கையின் தத்துவத்தைச் சற்றே ஆராய்வோம்.

குற்றம் இல்லை; கூற்றமும் இல்லை

கோசல நாட்டில் குற்றம் ஒன்றுமில்லை; அதனுல் எமனும் அங்கு இல்லை. எல்லோரும் தத்தம் மனத்தின்படி நல்லன செய்வதால் ‘கோபம்’ இல்லை. நல்லறங்கள் செய்தல் தவிர வேறு செயல் இன்மையால், ‘உயர்வு - தாழ்வு’ என்னும் வேறுபாடுகள் இல்லை எனக் கம்பர் கழறுதல் கருதற் குரியது.

> “ கூற்றம் இல்லைஓர் குற்றம் இலாமையால் ;
> சீற்றம் இல்லைதம் சிந்தையிற் செய்கையால்;
> ஆற்றல் நல்லறம் அல்ல திலாமையால்
> ஏற்றம் அல்ல(கு) இழிதக வில்லையே.”
>
> —நாட்டுப் படலம்

கோசல நாட்டுக் குடிகள் எத்தகைய குற்றமும் செய்திலர். அரசற்குவிரோதமான குற்றம், நாட்டிற்கு விரோதமான குற்றம், ஒழுக்கத்திற்கு மாறுன குற்றம், குடிகட்கு மாறுன குற்றம் முதலிய குற்றங்களில் ஒன்றையேனும் செய்திலர். ஆகவே, அவர்கள் எமபயத்திற்கு ஆளாகவில்லை. குற்றத்தால் வருவது கூற்றம். குற்றமே இலாத கோசல நாட்டில் கூற்றந்தான் ஏது ? கூற்றத்தின் பயந்தான் ஏது? எனவே, ‘மக்கள் குற்றமற்றவராக இருப்பின், பிறவிப் பேற்றைப் பெறுவர்’ எனக் கம்பர் கோசல நாட்டுக் குடிகளைச் சிறப்பிக்கு முகத்தால் நமக்கோர் அரிய உண்மையை உணர்த்தல் உன்னிப் பின்பற்றற் குரியது. குற்றமற்ற வாழ்க்கை ‘மனித பயம் தெய்வ பயம்’ என்னும் இரண்டினையும் கடந்து நிற்கும் சுதந்திர வாழ்க்கையன்றே ?

சுதந்திரம் பிறப்புரிமை

ஆகவே, சுதந்திரம் என்பது பிறர் நமக்குக் கொடுக்கும் ஒன்றன்று. நாம் குற்றமின்றி இருப்போமாயின் (நாட்டைப் பிறர்க்குக் காட்டித் தால் முதலியனவும் ‘குற்றம்’ என்பதனுள் அடங்கும்) நம் நிலை சுதந்திர நிலையே; நமது வாழ்க்கையும் சுதந்திர வாழ்க்கையாம். ‘இழந்த எங்கள் சுதந்திரத்தைக் கொடுங்கள்’ என ஒருவர் பிறரைக் கேட்கவேண்டுவதில்லை. அப்பிறரிடமிருந்து அடிமைப்பட்ட நாட்டினர் பெறத்தக்க தொன்றுமில்லை. இஃது உண்மைத்தத்துவம். அமைதியும் ஆராய்ச்சியுமே இதற்கு வேண்டற்பாலன. நாம் ‘குற்றம்’ இன்றி வாழ்வோமாயின், சுதந்திரம் நம்மைத் தேடி அடையும். நாம் அடைவது சுதந்திர வாழ்வேயாம்.

சிந்தனையின்றேல் சீற்றம் வரும்

“ சீற்றம் இல்லை தம் சிந்தையிற் செய்கையால் ” எனவரும் இரண்டாம் அடியில் விழுமிய ‘சகோதரத்வம்’ விளங்கக்காணலாம். சிந்தனை இன்மையால் சீற்றம் வருமேயன்றிச் சீற்றம் சிந்தனையோடு வாராது. கோசலநாட்டு மக்கள் எக்கருமத்தையும் சிந்தனையுடன் செய்வதால் சீற்றம்வர ஏதுவில்லை. சீற்றம் இல்லா இடத்துப் பகைமை ஏது ? எல்லாரும் சமத்துவம் எய்தி ஒன்றுபட்ட மனத்தராய்ச் சமநிலையில் அமர்ந்து வாழ்வர். எனவே நாட்டின் அழிவிற்கும் குழப்பத்திற்கும் மக்கள்மாட்டுச் சிந்தனையின்றித் தோன்றும் சீற்றமே காரணம். சிந்தனையுடன் மக்கள் எதனையும் செய்வாராயின், சீற்றமே அவர்தம் நாட்டில் தலை நீட்டாதொழியும். கோசல நாட்டு மக்கள் சிந்தனையோடு ஒவ்வொரு காரியத்தையும் செய்து வந்தமையால் சீற்றத்தை வென்றனர் ; சகோதரத்வத்தை நிலைநாட்டினர் ; உடனுறை வாழ்க்கையில் ஒன்றுபட்டனர்.

இச்சகோதரத்வமும் புறத்திருந்து புகுவதன்று ; புகுத்துவதுமன்று.; நம் மாட்டே இருப்பது. நாமே அதனை வளர்த்தல் வேண்டும்; புகுத்தல் வேண்டும்.

கம்பர் கண்ட சமத்துவ வாழ்வு சமதர்ம வாழ்வு

மேற்கூறிய செய்யுளின் ஈற்றிரண்டடிகள் ‘சமத்துவத்’தை வற்புறுத்துவன. மக்கள் ஆற்றவல்ல செயல்களால் ‘உயர்வு-தாழ்வு’ ஏற்படுகின்றன. ஆனல் கோசல நாட்டுமக்கள் ஆற்றிய செயலால் உயர்வு - தாழ்வு ஏற்பட்டில. என்னை ? யாவரும் ஒரே செயலை ஆற்றினர் ஆதலின் என்க. அஃதாவது ‘நல்லறம்’ என்பது. ‘நல்லறம் - நல்வாழ்க்கை - நற்செயல்’ என்பனபெரும்பான்மை ஒரே பொருள் கொண்டவை. யாவரும் ‘நல்வினை’ ஒன்றையே செய்வதெனத் துணிவுகொண்டு, அத்துணிவின்படி நடப்பாராயின் ‘சமத்துவம்’ அலைதன்றிப் பிறிதொன்றுண்டோ ?

ஆகவே, உலக ஞானத்தை உள்ளவாறு உணர்ந்த மாபெரும் புலவராய்க் கம்பர் பெருமான் ‘சுதந்திர வாழ்க்கை’ இன்னதென்பதை நாலடிப் பாசுரத்தால் நவிலுந்திறம் நன்குணர்ந்து பின்பற்றத்தக்கது. இராமகாதையைக் கூறுமுகத்தான் தமது பழுத்த அறிவிற்கும் அநுபவத்திற்கும் ஒத்த கருத்துக்களை இடம் நோக்கிச் செருகி நமக்கு நல்லறிவு கொளுத்திச் செல்லுதல் காண்டற்குரியது ! கற்றற்குரியது !! பின்பற்றற் குரியது !!!

சுதந்திரம் நமக்குள்ளேயிருக்கிறது

“ பிறரால் நீங்கள் உங்கள் உரிமைகளை அடைவதாக நினைத்தல் பிழை. பிறர் உங்கட்குத் தரத்தக்கது ஒன்றும் இல்லை. யாவும் உங்களிடத்தே யுள்ளன. உங்கள் ஒழுக்கத்தால்—குற்றமின்மையால் - எய்த வல்லனவே சுதந்திரம், சமத்துவம், சகோதரத்வம் முதலியன. என் பாசுரத்தைப் பன்னிப் பன்னிப்படியுங்கள். நீங்கள் உண்மையை உணர்வீர்கள். சுதந்திரம் தானக உங்களை வந்தணையும். நீங்கள் அடைய விரும்பும் சுதந்திரம் உங்களிடத்தே உள்ளது. அது வெளியிலிருப்பதாக எண்ணி ஏக்கமுற்றுத் திரிதல் வேண்டா; அதனை வேட்டையாடித் திரிதல்வேண்டா; வேண்டா” எனக் கம்பர் நம்மை எச்சரித்தல் மேற்பாவில் மேன்மையுறக் காணலாம். அறிவுடையோர் இக்கூற்றின் உண்மை உணர்வர்.

சோவியத் ஆட்சிமுறை

மேற்செய்யுளுடன் தழுவத்தக்க மற்றொரு செய்யுளையும் கம்பர் அளித்துளார். அது,

> “ வண்மை இல்லைஓர் வறுமை இன்மையால்;
> திண்மை இல்லைஓர் செறுநர் இன்மையால்;
> உண்மை இல்லைபொய் உரைஇ லாமையால்;
> வெண்மை இல்லைபல் கேள்வி மேவலால்.”
>
> —நாட்டுப் படலம்.

என்பது. கோசலநாட்டில் வறுமை இல்லாததால் ஈகை இல்லை. இன்று இவ்வுயரிய நிலையை சோவியத் ருஷ்யா அடைந்திருத்தல் மகிழ்ச்சிக்குரியது. கோசல நாட்டினர்க்குப் பகைவர் இல்லை. அதனுல் மக்களிடத்து வீரம் காணப்படவில்லை. யாவரும் ‘சாத்விகம்’ எய்தி இன்பப்பேற்றில் இனிதினிருந்தனர் என்பதாம். இதுவன்றோ வாழ்க்கையின் உயர்நிலை ! பொய் என்பதின்மையால் உண்மை என்பது காணப்படவில்லை. அஃதாவது ‘உண்மை’க்கு மதிப்பில்லை என்க. யாவர்க்கும் ‘கேள்வியறிவு’ பொருந்தி யிருந்தமையால், ‘அறியாமை’ இல்லையாம். என்னே கம்பர் காட்டும் சுதந்திர வாழ்வு !

கவிச்சக்கரவர்த்தியின் அரசியல் அறிவு

நாட்டில் வறுமை இல்லாமையே நல்வாழ்க்கைக்கு முதற்படி ; சன்மார்க்கத்துக்கு முதல் வித்து. நாட்டில் வறுமை தாண்டவ மாடுங்கால் கொலை, களவு முதலிய பாதகங்கள் தோன்றி - வளர்ந்து அவற்றின் கொடிய பயன்களை ஈதலில் தவறு. ஆயின்வறுமையை ஒழிப்பது, மக்கள் ஒற்றுமையேயாகும். கூன் - குருடு - முதலிய உறுப்பினரும் அநாதையரும் வறுமையுற வேண்டுவதில்லை என்பதை மேனுடுகளில் உள்ள ‘எளியர் விடுதிகள்’ என்பவை எடுத்தியம்புகின்றன. ஸர் ஹென்றி எம். ஸ்டான்லி என்பார் இங்கிலாந்து ‘எளியர் விடுதி’யில் இருந்தவர் ; இறுதியில் உலகப்புகழ் பெற்றார் ; பார்லிமெண்டில் அங்கத்தினரானர். இங்ஙனம் எளியரும் இன்பநிலை அடையத்தக்க சாதனம் மக்கள் இடத்தே இருப்ப, ‘தலைவிதி’, ‘பூர்வஜன்மபலன்’ எனக் கூறி, நம்மவரை அவர்தம் இழிநிலையிலே இருக்க விடுதல் - மனிதத் தன்மையாமா ? பேய்த்தன்மையாமா ? ஓர்க. எனவே, எக்காலத்தும், எந்நாட்டிலும் வறுமைதோன்றுதபடி செய்ய அந்நாட்டு மக்களிடத்தே ஆற்றல் உண்டு. இதைநன்குணர்ந்தவர் கம்பர். அரசியல் அறிவு சாலப் பெற்ற அவர் அரசியல் தத்துவத்தின் முதற்படியாகிய இதனை மறைமுகமாக முதலடியில் வற்புறுத்தல் கவனித்தற்குரியது.

இரண்டாம் அடியால், மக்கள் சாத்விக தர்மத்தைப் பின்பற்றுதல் வேண்டும்; அதுவே இன்பவாழ்க்கையை அளிப்பது என்னும் பேருண்மை வெளியாதல் காண்க. ‘பகைவர் இல்லா வாழ்க்கையே பயனுடைய வாழ்க்கை’ என்பது கம்பரது பொன்மொழி. மக்கள் பால் நல்லொழுக்கம் பல்குமாயின், பகைமை ஏது ? செரு ஏது ? செருநர் எங்குளர் ? பகைமையில்லா மக்கள் வாழும் நாடு - நகரம் - கிராமம் - எதுவாயினும் அதற்கு இணை இன்னதென இயம்புதல் கூடுமோ ? ‘தானே தனக்கு நிகர்’ என்றன்றோ கூறுதல்கும் !

மூன்றும் அடியால், மக்களிடத்தே பொய் இன்மையால் உண்மைக்கு மதிப்பில்லை என்பது கருத்து. பொய்யே பேசும் பாழ் நாவார் வாழும் வெற்றிடத்தே- பாழ்மனையிலே- உள்ளஒருவன் மெய்யே மொழிவானுயின், அம்மெய்மைக்கு மதிப்புண்டு. நாட்டொழ் மாந்தர் அனைவருமே மெய்யே பேசுவாராயின் பொய்மை இராதே ஒழிய மெய்மைக்கு மதிப்பிராதன்றோ? யாவருமே நல்லாராயின் நல்லர் என்னும் சொற்கு மதிப்பில்லையன்றோ ?

சாரம்

இவ்விரண்டு பாடல்களால் கம்பர் கழறும் சத்துப் பொருள்யாது? (1) மக்கள் எவ்விதக் குற்றமும் இன்றி வாழ்தல் வேண்டும் (2) சிந்தனையால் செயல் ஆற்ற வேண்டும் (3) யாவரும் ஒன்றுபட்டு நற்செயல் ஒன்றையே செய்தல் வேண்டும். (4) வறுமை, நாட்டில் தோன்றுதபடி செய்தல் வேண்டும். (5) பகைமையோ - பகைவரோ இராதபடி பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். (6) உண்மையே நிலவுதல் வேண்டும் (7) அறியாமை அறக்கல்வி கற்றல் வேண்டும். இவ்வேழானும் மக்கள் சமத்வம், சகோதரத்வம், சுதந்திரம் என்னும் முப்பாலையும் தப்பாமல் எய்துவர் என்பதேயாம். அறிவுடையோர் இதனை நன்கு ஆராய்ந்து இன்புறுவர். கம்பர் கனவுகாணும் சுதந்திர வாழ்க்கை - கோசல நாட்டு மக்கள் மீதுவைத்துத் தம்மாவலை வெளிப்படுத்திய அழகுறு வாழ்க்கை தமிழரிடம் தோன்றுமாயின் சமயப் பூசலோ, சாதிப் பூசலோ, பிற பூசலோ எழ இடமுண்டோ ?

ஹங்கேரியிலுள்ள 40 வயதுள்ள பெண் ஒருத்திக்கு முப்பது குழந்தைகள் இருக்கின்றனவாம். இவளுக்குப் பத்தாவது வயதில் முதல் குழந்தை பிறந்தது. இதுவரை ஆறு இரட்டைக் குழந்தைகளைப் பெற்றிருக்கிறாள்.

# அபூர்வமானபட்டணம்

## நியூயார்க் நகரம்

ஜோஸ்யரும் குறிசொல்வோரும்

“டெய்லி ஹெரால்டு” என்ற பத்திரிகையில் ஹெரால்டு புச்சர் என்பவர் பின் வருமாறு எழுதுகிறார்:—

நியூயார்க் ! ஆஹா ! என்ன அழகான பெயர் ! அந்நகரம் நாகரிகத்திலும் வியாபாரத்திலும் ஜனப் பெருக்கத்திலும் முன்னிற்கிறது ! அம்மட்டோ ! மூடப் பழக்க வழக்கங்களிலும் அந்நாடு பின்வாங்கவில்லை.

நீக்ரோ ஜனங்கள் குடியிருக்கும் பிரதேசத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அவர்களுக்கு ஜால வித்தைகளில் பிரிய மதிகம். பெரிய பெரிய வியாபாரிகள்கூட அந்த ஜால வித்தைகளைப் போய்ப் பார்க்கிறார்கள்.

ஜோஸ்யம், ரேகை சொல்லுதல், குறி சொல்லுதல் முதலியவைகளுக்காக அமெரிக்க மக்கள் ஐம்பதுலக்ஷம் பவுன் வருஷா வருஷம் செலவழிக்கிறார்கள். “எதிர்கால பலனைத் தெரிவிக்கும்” புத்தகங்களைச் சுமந்துகொண்டு விற்பனை செய்வோர் எத்தனைபேர் ! “எதிர்காலபலன் பார்க்கவேண்டாமா ? ஜோஸ்யம் பொய்தான் இருந்தாலும்கூட நாம் முன்னெச்சரிக்கையுடனிருக்கவேண்டாவா? அதற்காகவாவது ஒரு புத்தகம் வாங்கலாம்” என்று அப்புத்தகங்களை மக்கள் வாங்குகிறார்கள். ஒரு சிறிய விஷயம் முதல் பெரிய விஷயம்வரை எல்லாவற்றிற்கும் அங்கே சங்கங்கள் இருக்கும் ! அங்கே யில்லாத விஷயமே யில்லை !

பெண்கள் கடைகளில் புகுந்து ஒவ்வொரு சாமானைப் புரட்டிப் பார்த்து விட்டு ஒன்றும் வாங்காது போய்விடுவார்கள். நிர்வாணமான பெண்களின் படங்களைத் தெருவில் சிலர் விற்பனை செய்வர். அப்படங்களைப் பார்த்துப் பல்லை இளித்துக்கொண்டு பத்துப்பேர் நிற்பர். நியூயார்க் பட்டணமே அபூர்வ பட்டணம் !

# ருஷ்ய மக்களின் முயற்சி

## கூட்டுறவுச் சங்கங்களின் கண்காணிப்பு

### சுதேசிய உணர்ச்சியே முன்னேற்ற இரகசியம்

### ருஷ்யாவில் ஏற்பட்ட தொழிற் புரட்சி

(ஒரு பிரெஞ்சுக் கட்டுரையைத் தழுவியது)

(திரு - அருமை. துரை. கைலாசநாதன் எம். ஏ.)

II

**ருஷ்ய எண்ணெய்**

எண்ணெய் உற்பத்தியில் ருஷ்யா உலகில் இரண்டாவதான இடத்தைப் பெற்றிருக்கிறது. உலகில் எடுக்கப்படும் எண்ணெயில் நூற்றுக்குப் பத்து பங்கு ருஷ்யக் கிணறுகளிலிருந்தே இறைக்கப்படுகின்றது. பாகு க்ரோஸ்னி முதலிய ஜில்லாக்களில் ஏராளமான புதிய கிணறுகள் தோண்டப் பட்டிருக்கின்றன. பாட்டும் பிரதேசத்தை பாகுவோடு குழாய்களினால் இணைத்து எண்ணெயைச் சுத்தம் செய்யப்படுகிறது. ருஷ்யாவின் இதர பாகங்களிலும், ஸைபீரியாவிலும் மிகப் பெரிய எண்ணெய் சுத்திசெய்யும் ஆலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. வடக்கு 'காகஸஸ்' பிரதேசத்திலுள்ள தூர்ந்த கிணறுகளெல்லாம் தோண்டப்படுகின்றன.

மேற்கூறிய தொழிற் பெருக்கினால், ருஷ்யப் பொருளாதாரத்திலேயே ஒரு புரட்சி ஏற்பட்டிருக்கிறது. ருஷ்யத் தொழிலாளிகள், விவசாயிகளுள்பட, மிகவும் முன்னேற்ற மடைந்திருக்கிறார்கள். அவர்கள், அமெரிக்கா வுள்பட, ஐரோப்பாவிலுள்ள எந்தத் தொழிலாளருக்கும் சளைத்தவரல்லர்.

**ஜனத்தொகையும் வாழ்க்கையும்**

தற்போது ருஷ்யாவில் ஜனத்தொகை பெருகி வருகிறது. அங்கு, ஜனங்களுக்கு வேண்டிய சாமான்களை வாங்க வசதியு மேற்பட்டு வருகிறது. அவர்கள் அறிவு வளரவளரவும் நாகரிகம் முற்ற முற்றவும், மேன்மையானதும் மிருதுவானதுமான சாமான்களையும், ஆகார வகைகளையுமே நாடுகிறார்கள். ஆகலின் சில்லரைத் தொழில்களிலும் ருஷ்யா, தன் நோக்கத்தைச் செலுத்துகிறது. பருத்தி விளைவும், ஆடு மாடுவளர்ப்பும் முக்கியமாகக் கவனிக்கப்படுகின்றன. ஒரு வருஷத்திற்கு 50 கோடிக்கு மேலான ஆகாரப் புட்டிகள் தயாராகின்றன.

பொதுவாக ருஷ்ய ஜனங்களின் தேவைகளையே, இனி ருஷ்ய அரசாங்கம் அதிகமாகக் கவனிக்கும். ருஷ்ய மக்கள் நாட்டின் முன்னேற்றத்தின் பொருட்டுத் தங்கள் சுகத்தையும் ஒரு பொருட்டாக நினைக்கவில்லை. அவர்கள் உற்பத்தி செய்த சாமான்களையெல்லாம் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து, வெளிநாடுகளிலிருந்து இறக்குமதியாகும் சாமான்களைக் குறைவாக வாங்கி நாட்டின் செல்வத்தைப் பெருக்கினார்கள். இன்று அவர்கள் மனோபீஷ்டம் நிறைவேறி விட்டது. ருஷ்யா இன்று ஐரோப்பிய நாடுகளின் முன்னணியில் நின்று, மற்றைய நாடுகளிலுள்ள பொருளாதார நெருக்கடியையும், வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பார்த்து பரிகசிக்கின்றது. ஆகவே ருஷ்யமக்கள் தங்கள் தாயைக் காத்த பெருமையில் சற்றுக் கர்வமடைந்திருக்கிறார்கள். ஆனால் அது சரியான கர்வமேயன்றிப் பிறிதில்லை. இங்ஙனமயில் ஏன் அவர்கள் ஓய்வெடுத்துக்கொள்ளக் கூடாது? நல்ல ஆகாரம் விரும்பக்கூடாது? அஃது அவர்களின் உரிமையன்றோ?

**தொழிற் கல்வி**

ருஷ்யாவில் மிகவும் முன்னேற்ற மடைந்ததும், தற்போது கல்வித் திட்டத்தில் முன்னணியி லிருப்பதும், தொழிற் கல்வியே. ருஷ்ய எஞ்சினீயர்கள், துருக்கி, ஈரான் முதலிய இடங்களில்பல உற்பத்திச் சாலைகளமைத்து, உதவி புரிந்து வருகிறார்கள். 1936-ன் முற்பகுதியில் 2,3000 எஞ்சினீயர்களும், 16500 'போர்மன்களும்' பட்டம் பெற்று, கலாசாலையினின்றும் வெளியேறினார்கள்.

ருஷ்யத்தொழிற் பெருக்கின் முக்கியமான தடை அந்நாட்டின் போக்குவரவு சாதனக்குறைவே. பழையசாலைகளோ, மிகவும் கேவலமானவை. நாட்டின் விஸ்தீரணம் அதிகமாயிருப்பதால் நாடு முழுமையும் சாலைகளமைக்க வசதியில்லை. ஆயினும் புதியசாலைகள் ஏற்படுத்திக்கொண்டே வருகின்றன. மேலும் மின்சார இருப்புப்பாதைகள் ஏராளமாகப் போடப்படுகின்றன. கப்பல் கட்டும் தொழில் விருத்தியடைவதோடு வெளி நாடுகளிலிருந்தும் கப்பல்கள் வாங்கப்படுகின்றன. அநேக கால்வாய்களும் ஆறுகளும் வெட்டப்பட்டு, ஆங்காங்கே துறைமுகங்களும் கட்டப்பட்டு வருகின்றன. ஆர்டிக் மகா சமுத்திரத்தில் போக்குவரவு சாதனங்களை ருஷ்யா ஏற்படுத்திவிட்டது.

**தொழில் முறை**

கோடிக்கணக்கான ருஷ்யமக்கள் தொழிற் சாலைகளில் வேலை செய்கிறார்கள். 1923 முதல் தொழிலாளியின் தொகை வருஷத்திற்குப் பதினொன்கு சதவிகிதம் பெருகிக்கொண்டே வருகிறது. அவர்கள் உழைப்புக் கூலியும் வெகுமானங்களும் தொழிற் பெருக்குக்குத் தக்கபடி அதிகப்படுத்தப்படுகின்றன. சோவியத் தொழிலாளர் அரசாங்கத்துக்கு நேராகக் கீழ்ப்பட்டவரல்லர். அரசாங்கத்தின் மேற்பார்வையிலுள்ள 'கூட்டுறவுச்சங்கங்களினால்' அவர்கள் கண்காணிக்கப்படுகிறார்கள். இச்சங்கங்கள் பொருளாதாரத்தில் சுயேச்சை யானவை. அதாவது அவர்கள் தங்கள் வரவு செலவுகளுக்கு வேறொருவரையு மெதிர்பாராமல், தாங்களே அதற்குத் தகுந்த திட்டங்களை வகுத்தல் வேண்டும். ஆதலின் அவர்கள் ஒவ்வொருவருக்கும் வேலைக்குத் தகுந்த கூலி கொடுக்க வேண்டிவருகிறது. இது பொதுவுடைமையின் அடிப்படையான 'தேவைக்குத் தகுந்த கூலி' என்ற கொள்கைக்கு முரண்படுகிறது.

**அரசாங்க முயற்சி**

இது நிற்க, அரசாங்கமும் இக்கூட்டுறவுச் சங்கங்களும் பொது மக்களின் கல்வியறிவையும், பொருள் நிலையையும் பெருக்க முயல்கின்றன. ஜனங்களின் நித்தியவாழ்க்கை உயர்வதால், நாட்டின் உற்பத்தியும் அதிகப்படுகிறதென்பதை ருஷ்ய அரசாங்கம் கண்கூடாகக் காண்கிறது. நாட்டின் தொழிலாளர்களில் பெரும்பான்மையோர் முப்பது வயதுக்குட்பட்டவர்கள். அவர்கள் கைப்பழக்கத்தினாலும், அறிவு வளர்ச்சியாலும் மிகத் தேர்ச்சிபெற்ற நிபுணர்களாகி விடுவார்களென்று அரசாங்க மெண்ணுகிறது.

---

சென்ற ஐந்து வருஷங்களில் இந்திய ஸிவில் ஸெர்விஸ் இலாகாவில் 91 ஐரோப்பியரும் 150 இந்தியரும் சேர்க்கப்பட்டனர். ஆனால் „வேலையிலிருந்து விலகியவரோ 194 ஐரோப்பியர்; 11 இந்தியர்.



# நிகரில்லா ருஷ்யப் படை

## ருஷ்ய ஜெர்மெனி யுத்தம்

**ஆகாய விமானப் படையின் சிறப்பு**

ருஷ்யாவின் இராணுவப்படை உலகத்திலேயே முதன்மை ஸ்தானம் பெற்றிருக்கிறது. ஆகாய விமானப் படையிலும் அந்நாட்டுக்கு நிகராக எந்நாட்டையும் கூறுதல் முடியாது. ஸார் மன்னர் காலத்து இருந்த ருஷ்ய மக்கள் வேறு. இக்காலத்து ருஷ்ய மக்களிடத்துத் தேசபக்தி, இராணுவப் பயிற்சி முதலியன தீவிரமாகக் காணப்படுகின்றன.

ருஷ்யப்பட்டாளத்தில் பதின்மூன்று லட்சம் வீரர் இருக்கிறார். இஃதல்லாமல் சண்டை மூளுங்காலத்து யுத்தத்துக்குப் போக ஒருகோடிபேர் சித்தமாக இருக்கின்றனர்.

ருஷ்ய அரசாங்கம் இதோடு நின்று விடவில்லை; நாட்டுமக்கள் அனைவரையும் இராணுவத்தில் பழக்குவதற்காகப் பல சங்கங்களை ஆரம்பித்திருக்கிறது. அவைகளில் ஒன்று 'ஓஸோவியாக்கிம் சொஸைடி'.

**வாலிபரைப் பழக்குதல்**

1935-ம் வருஷத்தில் இந்தச்சங்கத்தார் 3500 வாலிபர்களைச் சண்டைசெய்வதில் பழக்கினர். அவர்கள் அனைவரும் விமானம் ஓட்டுவதிலும் பழக்கப்பட்டார். 1936-ம் வருஷத்தில் 8000 பேர் விமானம் ஓட்ட அந்தச் சங்கத்திலேயே பயின்றனர். 1934-35-ல் 990,000 பேர் இராணுவத்திலும், பத்துலட்சம் பேர் விஷப்புகை உதவியால் யுத்தம் செய்யவும், படங்கள் வரையப் பத்து லட்சம்பேரும், குதிரைகளைப் பாதுகாக்கப் பதினைந்து லட்சம் பேரும், விமான இயந்திரங்களை ரிப்பேர் செய்ய இரண்டாயிரம் பேரும், பழக்கப்பட்டனர். ருஷ்யாமுழுவதும் "இளைஞர் அனைவரும் பறவைகளைப்போல ஆகாயத்தில் பறத்தல் வேண்டும்" என்று கூறப்படுகிறது. இதுபோன்ற முயற்சியையுடைய நாடு உலகில் வேறு எதுவும் இல்லை.

**ருஷ்ய - ஜெர்மெனி போர்**

ஜெர்மெனிக்கும் ருஷ்யாவுக்கும் போர் மூண்டாலேயே பகைமை அதிகமாகத் தோன்றும். ஏன்? இருநாடுகளும் யுத்த ஆயுதங்களுக்காக மிக்க செலவைச் செய்திருக்கின்றன. மக்கள் அனைவரும் இராணுவத்தில் பழக்கப்பட்டிருக்கின்றனர்.

இவைபோன்ற வேறுசில காரணங்களும் இருக்கின்றன. மக்களிடத்துப் பொது உடைமைக்கொள்கையைப் பரவச்செய்து நாட்டைக் கெடுத்துவிடுகிறதென ஜெர்மெனி நினைக்கிறது. நாகரிக முன்னேற்றத்துக்கே விரோதமான முதலாளித்துவத்தை (பாஸிஸம்) ஜெர்மெனி பரவச்செய்கிறதென ருஷ்யா அதன் மீது பகைமை கொண்டிருக்கிறது.

சண்டையில் ஜெர்மெனி ஜாக்கிரதையாக இருத்தல் வேண்டும். அதற்கு உணவுப்பொருள் கிடைத்தல் அரிது. பகைவர் நாட்டில் வெகுதூரம் சென்று விட்டால் மீளுதல் கடினம். ஆனால் ருஷ்யருக்கு இவ்வித ஆபத்துக்கள் உண்டாகா. வரப்போகும் உலக யுத்தத்தில் ருஷ்யாவுக்கும் ஜெர்மெனிக்கும் பெரும்போர் நிகழ்தல் கூடும். ஜெர்மெனிக்குஜப்பான் துணைசெல்லும்.

இன்னும் சற்றுதூரம் சென்று சண்டையின் முடிவை எண்ணுங்கள். ஜெர்மெனி தோற்று விடுமாயின் அஃதும் ஒரு பொது உடைமை நாடாகவே மாறும். அப்போது ஹிட்லர் பாடு ஆபத்தாகவே முடியும். ருஷ்யா தோற்றாலும் அந்நாட்டை முதலாளித்துவ நாடாக மாற்றுதல் முடியாது. ஒருவேளை தரித்திரமும் பொருளாதார நெருக்கடியும் அந்நாட்டில் தாண்டவமாடலாம்.

(ரௌ. டே)

# திருப்பாவை

(பண்டிதை எஸ். கிருஷ்ணவேணி அம்மாள்)

VI

செங்கண் :—சிவந்த கண்கள். மிக்க செல்வப் பெருக்கினாலும் ஒருவருக்குக் கண் சிவக்கக்கூடும். வாத்ஸல்யத்தினால் (குற்றத்தையும் குணமாகக் கொள்ளும் கருணையினால்) மக்களைக் குளிர நோக்கும்போதும் கண்ணில் சிவப்பு உண்டாவது இயல்பு. இது மனத்திலுள்ள அருட் குணத்தைத் தோற்றுவிப்பதற்கு ஓர் அறிகுறியாகும்.

செங்கண்:—

"ஏற்றக் கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளற் பெரும்
ஆற்றப் படைத்தான் மகனே" [பசுக்கள்

இவ்வடிகள் செல்வப் பெருக்கைக் குறிப்பன.

"ஊற்ற முடையாய் பெரியாய் உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே"

"கிங்கிணி வாய்ச்செய்த
தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே
யெம்மேல் விழியாவோ"

இவ்வடிகள் வாத்ஸல்யத்தைக் குறிப்பன.

கதிர் மதியம்போல் முகத்தான் :—ஆதித்தன் போன்ற ஒளியையும், சந்திரனைப் போன்ற குளிர்ச்சியையும் பெற்ற அழகிய முகத்தை யுடையவன். அன்றியும் தீமைகளையே புரிகின்றவர்களுக்கு அணுகமுடியாத வெப்பத்தை யுடைய ஆதித்தனைப் போன்றும், நன்மைகளையே புரிகின்றவர்களுக்கு அணுகி நலம்பெறக்கூடிய குளிர்ச்சியை யுடைய திங்கள் போன்றும் இருக்குந்தன்மை இறைவனுக் குண்டாதலால் கதிர் மதியம்போல் முகத்தான் என அன்னையார் சித்திரித்துள்ளார்.

இனி இச்சொற்றொடர்களுக்கேற்ற பாசுரங்களிற் செல்வாம் :—

கதிர் மதியம்போல் முகத்தான் :—

"மாற்றா ருனக்கு
வலிதொலைந்துன் வாசற்கண்
ஆற்றா தி வந்துன்
அடிபணியு மாபோலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்து"

"அங்கண்மா ஞாலத் தரச ரபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட்டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்
[தோம்"

"திங்களும் ஆதித்தியனு மெழுந்தாற்போல்
அங்க ணிரண்டுங்கொண் டெங்கள்மேல்
எங்கள்மேற்சாபமிழிந்து"[நோக்குதியேல்

"மாரி மலைமுழஞ்சில் மன்னிக் கிடந்துறங்
சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து" [குஞ்

இன்னும் இப்பாசுரங்களிலுள்ள சொற்பொருத்தம், பொருட் பொருத்தங்களையும் ஊன்றி நோக்குக.

நாராயணனே நமக்கே பறைதருவான் பாரோர்புகழப் படிந்து:—ஸ்ரீமந்நாராயணன் தவிர வேறொரு இரட்சமும் இல்லையெனக் கருதி யுள்ளவர்க்கே சிறந்த புருஷார்த்தத்தைத் (அவனுக்குத்தொண்டு புரியும் கைங்கர்யத்தை) தருவன்.

நாராயணனே :—

"ஒருத்தி மகனாய்ப் பிறந்தோ ரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில்
நெருப் பென்ன நின்ற நெடுமாலே"

"மாலே", "மணிவண்ணா", "ஆலினிலையாய்"

"கூடாரை வெல்லுஞ்சீர் கோவிந்தா"

"குறைவொன்று மில்லாத கோவிந்தா"

"கோவிந்தா" "இறைவா"

"வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவ
[னைத்"

"ஈரிரண்டும் மால்வரைத் தோள்,
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமா
லால்"

நமக்கே:—

"யாம்பெறு சம்மானம்"

"கறவைகள் பின்சென்று கானகஞ் சேர்ந்
துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்துன்
றன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடை
[யோம்"

"உன்றன்னோடு
உறவேல் நமக்கிங் கொழிக்க வொழியாது"

"சிற்றஞ்சிறுகாலை வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும்"

பறை தருவான் :—

"உன்னை,
அருதித்து வந்தோம் பறைதருதி யாகில்"

"மேலையார் செய்வனகள்
வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை யெல்லாம்
நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துன்
பாஞ்சசன் னியமே
போல்வன சங்கங்கள்
போய்ப்பா டுடையனவே
சாலப் பெரும்பறையே
பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையாய் அருள்"

"உன்றன்னை, பாடிப்பறை கொண்டு"

"நீதாராய் பறை"

"பெற்றம்மேய்த்துண்ணுங்குலத்திற்பிறந்துநீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண் கோ
விந்தா
எற்றைக்கும் ஏழேழ்பிறவிக்குமுன்றன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநா மாட்
செய்வோம்"

"அங்கப் பறை கொண்ட"

பாரோர் பகழப் படிந்து :—

"திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமுந் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பா
[வாய்"

"யாம்பெறு சம்மானம்"

"நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்
பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணி
வோம்
ஆடையுடுப்போ மதன் பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்"

"மற்றை நங்காமங்கள் மாற்று"

எங்கும் திருவருள்பெற் றின்புறுவர்"

முதற் பாசுரத்திற்கும், கடைசி பாசுரத்திற்கும் சொற்களினாலும் பொருளினாலும் உள்ள பொருத்தங்கள்.

**சொற்பொருத்தம்**

முதல்:—"மார்கழித் திங்கள்"
கடைசி:—"திங்கள் திருமுகத்து"
முதல்:—"கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம் போல்முகத்தான்"
முதல்:—செங்கண் திருமுகத்துச் செயிழையார்"

**பொருட்பொருத்தம்**

முதல்:—"நேரிழையீர்..."
கடைசி:—"சேயிழையார்..."
முதல்:—"கூர்வேல் கொடுந்தொழிலன்
நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி
யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண்
கதிர்மதியம்போல் முகத்தான்"
கடைசி:—"வங்கக் கடல்கடைந்த மாதவனைக்
[கேசவனை"
முதல்:—"நாராயணனே"
கடைசி:—"ஈரிரண்டு மால்வரைத்தோள்,
செங்கண் திருமுகத்துச் செல்வத் திரு
[மாலால்"
முதல்:—"நமக்கேபறைதருவான்"
கடைசி:—"அங்கப்பறைகொண்ட வாற்றை"
முதல்:—"நீராடப் போதுவீர் போதுமினோ"
கடைசி:—"அணிப்புதுவை,
பைங்கமலத் தண்டெரியற் பட்டர்பிரான்
கோதைசொன்ன
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப்பரி சுரைப்பார்"
முதல்:—"பாரோர் புகழப் படிந்து"
கடைசி:—"எங்கும் திருவருள் பெற்று இன்
[புறுவர்"

முறைமுறையே இவற்றின்பொருளை இயம்பப் புகின் விரியுமாதலின் விடுத்தாம். ஆர்வமிகுந்தோர் ஆராய்ந்துணர்க.

